# காழியந்தாதி. 6714

வையஞ் சலந்தர னுலழி யாதட்டு வாகைகொண்டு
செய்யஞ் சலந்தர மெண்ணாது தக்கனுந் தெய்வமென்றோ
ரையஞ் சலந்தர மாற்றிய காழி யருமருந்தே
மெய்யஞ் சலந்தரக் கூற்றெய்து நாளில் வெளிநிற்பையே. ()

பையா டணந்தன் புகழ்காழிப் பிள்ளைக்குப் பாலருளுங்
கையா டணந்தன மாய்க்கொண்ட கோன்றந்தகாதலெண்ணார்
மெய்யா டணந்தன் மருகோன் வெறியயர் வெங்களத்தே
மையா டணந்தன் பொருட்டா லடுதன் மரபல்லவே. (ருஅ)

பலங்கற் பகமிடு வானுங் கமலமும் பாப்பணையும்
புலங்கற் பகவல்லி யார்க்கரு ளாரியன் புள்ளெடுத்த
விலங்கற் பகவன் வளர்காழி மாநகர் மேவியங்கே
யிலங்கற் பகனொடிப் போதிருப் போர்த மிருக்கைகளே. ()

இருப்ப ரணங்கருத் தென்றே யரசுசெ யீசர்வெள்ளிப்
பொருப்ப ரணங்கொழித் தாள்காழி யார்வரைப் பூங்கிளிகா
டருப்ப ரணஞ்சும் புனமயில் காள்சென்ற தாரைசொல்வீர்
விருப்ப ரணம்புனை யாவெரிந் வேட்டுவர் மென்கொடியே.()

கொடியவென் பாரிடஞ்சூழ்கூத்தவேட்டுருக்கொண்டுமென்ன
னெடியவென் பாரிடஞ்சேரன்னமேயென்றநித்தவிண்ணோர்
கடியவென் பாரிடம் போற்றுந் தலைபுனை காழிக்கங்கை
முடியவென் பாரிடங் கொள்ளா வினைகெட முன்னுகவே.()

முன்ன விராவண மேவிய வேணியன் முத்தமிழ்க்காய்ப்
பின்ன விராவண நம்பிமுன் காட்டும் பிரான்கதிநீ
யென்ன விராவணன் பாலருள் காழிய னேதிலர்பான்
மன்ன விராவண னம்பினர் பானுறை வண்ணத்தனே. (கூ௨)

வண்ணந் தலைவரும் வாயில்வைத் தூதி வளர்புடவிக்
கண்ணந் தலைவரு மெய்தாமற் காத்தவர் காக்கநஞ்ச
முண்ணந் தலைவ ருமைபாகர் காழியை யோதுநெஞ்சே
யெண்ணந் தலைவரு மெண்ணரும் வீடு மெளிவருமே. (சுங)

வருமன் பரசமை யந்தோளி பங்கன் மதனைக்கண்ணாற்
பொருமன் பரசமை யங்கையன் காழிப் புரத்தருள்கூர்
கருமன் பரசமை யம்புகு தாதெனைக் காத்தருளுந்
தருமன் பரசமை யங்கண்டு போற்றத் தருமறிவே. (சுச)

அறியாப் படிவனைக் காழிப் பிரானையொ ராயிழைமுன்
செறியாப் படிதறி நின்றெழுந் தானைத் தினந்தமிழ்க்காய்
நெறியாப் படிமிசைக் காசுவைத் தானை நினைந்துசொலலீர்
குறியாப் படிதொடுத் தலவோரைப் பாடியென் கூடுவதே. ()

கூடலஞ் சங்கம் பெறுங்கவி தேருங் குழைச்செவியென்
பாடலஞ் சங்கம் பெருக்கவி தேர்ந்தருள் பாலிகருமோ
நீடலஞ் சங்கந் தகர்ப்பக் கருவென்று நித்திலங்கொணா
டோடலஞ் சங்கம் பலைகாட்டுங் காழி யொருமுதலே. (சுசு)

ஒருவான் பணிமுடி தானுக லிங்க முவந்திருத்தித்
திருவான் பணிசெய வாங்கேயவ் வெணகதிர் செங்கதிரைப்
பொருவான் பணியுவன் வைகலு மேத்தப் பொருவிடைமேல்
வருவான் பணியுர கத்தான்றென் காழி மலையண்ணலே.(சுஎ)

மலையம் புகலிக் கடுங்கா லுலாவ வலைந்தமுந்நீ
ரலையம் புகலித் திடவயர் வானுயிர்க் கியார்துணைகாண்
சிலையம் புகலித் திருமா லெனப்பெற்ற சேவகனண்
ணிலையம் புகலிப் பெருங்காழிக் கேகொண்ட நின்மலனே.()

மலப்புற வம்பனை மெய்ம்மூக்கு நாச்செவி மாலைக்குழ் [illegible]
புலப்புற வம்புகும் வேடனை யாண்டருள் பூப்பதென்றுள்
கலப்புற வம்பிகை யோடெயில சூழ்கடற் காழியெனுந்
தலப்புற வந்தனி லேவீற் றிருக்கின்ற சற்குருவே. (சுகூ)

குருகணிகைக்கைந்தெழுத்தோதுங்கிள்ளையைக்கொண்டிலவா
வருகணி கைக்குலத் தோரேவல் செய்யவும் வாயத்திடுமோ
வொருகணி கைக்கும் வினைதீரக் காழி யொருவன்பொற்று
ளருகணி கைக்கெழு வோரேவல் செய்தில மாயினுமே (எ0)

ஆயகங் கந்தரஞ் சேர்மதிற் காழி யமர்ந்ததெய்வ
நாயகங் கந்தரன் பாங்காசி வாழ்விச்வ நாதனென்று
லேயகங் கந்தரங் கம்பகைக் கோதிய தென்னமின்னுந்
தீயகங் கந்தர மாரற் குயிர்கிலே செப்பிடுமே. (எக)

செப்ப வருந்திவ சங்தொறு மோடித் திரிந்துபன்றி
யொப்ப வருந்தி யுடற்கன்பு வைப்பவ ரூழிநமன்
கைப்ப வருந்தி மெலிவார்நங் காழிக் கடவுட்கன்பு
வைப்ப வருந்தி மலரோன் விதியில் வருந்திலரே. (எஉ)

இலவ தரத்தி யொருபாக மாதவ ரீட்டிமகத்
தலவ தரத்தி தனைவென்ற காழித் தலைவமுன் றால்
வலவ தரத்தி னிலையெழுத் தான்மண் மறந்துவிண்மேற்
செலவ தரத்தி னெனைக்காப் பதுநின் றிருவடியே. (எங)

திருக்கங் கணஞ்சிலை நாணுகப் பூட்டித் திரிபுரத்தை
முருக்கங் கணம்ப னுறைகாழிக் கோயிலின் முன்புசெல்லார்
நெருக்கங் கணம்புனை யார்பணி யார்பணி நேர்ந்ததொண்டர்
வருக்கங் கணம்புகு தார்பிறந் தாலுதென் மண்ணிடத்தே. ()

இடக்கா சினிபணி யெம்பெரு மான்றிசை யெட்டுமௌங்
தடக்கா சினிபுடை சூழ்காழி வாழெந்தை யாடரவப்
படக்கா சினிவந்த நூபுரத் தாளைப் பணியிலுடல்
விடக்கா சினிவரு மோவரு மோமறு வேதனையே. (எரு)

வேதா ரணிய மணவாளர் காழி விமலர்கொன்றைப்
போதா ரணிய மரும்பாதத் தன்பர் பொருளென்பரோ
மாதா ரணியம் புயத்தேந்து மாட்சியும் வானவர்பொற்
காதா ரணிய லரசாட்சி யும்பிற காட்சியுமே. (எசு)

காணரும் பன்னகங் காட்டிய வல்குற் கரும்பனையார்
வீணரும் பன்ன மூலக்கிரங் காதருள் வேலையமு
தூணரும் பன்ன மிசைமா தவரு மொலிமறைநூல்
வாணரும் பன்ன வருங்காழி மாமலை வானவனே. (எஎ)

வான வரம்பன் பரிமேல் வரவெள்ளை வாரணமேன்
ஞான வரம்பன் வரவருள் காழியி னம்பர்வெற்பிற்
கான வரம்பன்ன கண்ணியைக் கண்டெய்துங் காளைவர
மான வரம்பன் முறைதருந் தேவர்க்கு மாற்றரிதே. (எஅ)

அரியுடை யக்க விணைத்தாளர் காழி யமலர்தென்ன
னெரியுடை யக்கவி யோதிய செய்தொழு மீசர்வெற்பில்
விரியுடை யக்கவிர் சூழ்கான் வருமிவள் வேடர்தழை
வரியுடை யக்கவிர் மாலைமின் னீபுவி மாமன்னனே. (எகூ)

மாமா சுகந்த மணிமிடற் றுய்பொன் மலர்ந்தகொன்றைத்
தாமா சுகந்த மலர்ச்சோலைக் காழியிற் சங்கரனே
காமா சுகந்தவ னோக்கிய வாகையிக் கன்னிக்குண்மை
யாமா சுகந்த விரவலர் வாளி யவன்விடிலே. (அ0)

விடிய வருஙகதிர் சூழமதிற் காழி விமலர்வெற்பி
னெடிய வருந்ததி யனனார் மனைவயி னீடுமிரா
முடிய வருந்தி யிராதன்ப ரெயதினு மொய்ம்மதிபோற்
கடிய வருங்குடிச் சேவலுந் தாயர்வெங் காவலுமே. (அக)

காவடி வான முயர்சாழி யீசர் கவுரிகொங்கைப்
பூவடி வான மணிமார்பர் வெற்பினிற் போர்புரிகைம்
மாவடி வானன்பி னுலேனல் காவன் மறந்துநிற்குந்
தீவடி வானங் கொடுந்தா யகத்திற் செறிக்குமன்றே. (அஉ)

செறிவா னரம்பையர் நஙகேள்வர் பூசிக்குந் தேமலரின்
பிறிவா னரந்த மணநீகரு மென்றலை பேதையர்நல்
லறிவா னரம்புளர் வோர்பந் தெறிய வருஙகனிகொண்
டெறிவா னரம்பயி லுஞ்சோலைக் காழி யிறையடிககே (அங)

அடியா வனசத்த வாரிதி மாலறி யாதனநீண்
முடியா வனசதத னுடரி தேனு முழுதறியம்
படியா வனசத்த னென்றிக ழானென்னைப் பண்ணவருங
கடியா வனசதத மார்தமிழ்க காழிக் கறைககண்டனே.(அச)

கண்டலங கான மலரே குருகணி கைச்சிறியார்
வண்டலங் கான மகிழ்புன்னை யேகஙகுல் வந்தனரோ
விண்டலங் கான மருமல ரோன்ஞெழும் வேணியருட்
கொண்டலங் கானந்தக் கூத்தாடுங் காழிநங் கொற்றவரே. ()

கொற்றுருத திக்கு நெடிதுயிர்க் கும்பணிக் கோலர்பொன்னிச்
சொற்றுருத் திக்கு வளைக்கண்டர் காழியர் தோளையல்லான்
மற்றுருத் திக்கு மதியா வொருத்திக்கு மாதர்குழா
முற்றுருத் திக்கு வளைக்கின்ற வேள்வரி னுட்பகையே. (அசு)

உள்ளத் தருக்கு மழுக்கா று மன்றி யுறுதியென்றாக்
கள்ளத் தருக்கும் வெளிப்படு மோதென்ன கடலையங்கை
வள்ளத் தருக்கு முனிபோற்றுங் காழி வரதர்பொன்மான்
கொள்ளத் தருக்கும் வினைதீர்ப் பவர்தங் குரைகழலே. (அஎ

குரமா விலைசெய்த தென்காழி யீசர் குவட்டுமன்னர்
கரமா விலையுறக் கண்டோ மிலைமுன்கைக் கட்டியில்லைச்
சரமா விலையிவர் தாம்வேட்டஞ் செய்தது தானுமவர்
வரமா விலையன்றி யுண்டோ கரிநிரை மானிரையே. (அஅ)

மானகங் காள மணிப்புய னேதிரை வாரிதிபோ
லானகங் காள மொலிகாட்டுங் காழி யருமருந்தே
போனகங் காள மெனக்கொண்ட தேவவெப் போதுதமி
யேனகங் காள மொழித்தொழி யாமுத்தி யெய்துவனே.(அகூ)

துவரத் தனையொளி வேணிப் பிரானையின் சொல்லமுதங்
கவரத் தனையன் றனக்கமு தந்தந்த காதலியா
ரிவரத் தனையுயர் காழியெம் மானையுற் றேவல்செய்யு
மவரத் தனைவரும் பெற்றார்பெற் றேனில்லை யவ்வரத்தே. ()

வரவாம் பலதனை யுற்றோர் வதன மதிக்கணிகா
யிரவாம் பலமலை தன்பாகர் காழி யிமயவெற்பிற்
றூரவாம் பலபரி யன்பர்பொற் றேரிற் குறித்தசங்கத்
தரவாம் பலமெய்த லாலணங் கேமனந் தானெய்துமே (கூக)

எய்த்தவ ராக வினைக்குரு ஊக்கமு நீந்துசெல்வ
முய்த்தவ ராகமஞ் சேர்காழி நாத ருணர்வுருன்றா
மெய்த்தவ ராக முடைய பிரானென்னை வேண்டிவந்தார்
பொய்த்தவராகவமஞ்சேன்வெஞ்சேற்கொடிப்போர்மதனே

மதவத் திரமக வைப்பெற்ற காரணர் வல்லியத்தோ
லிதவத் திரமெனக் கொண்டதென் காழி யிறைவர்வெற்பில்
விதவத் திரமத வேளெய்யும் போதன்பர் மென்மலர்த்தா
ருதவத் திரமனத் தன்பாமென் பாங்கி யொருத்தியுமே. (௬௩)

ஒருகா தரம்பெறச் சாய்ந்திறு மாந்தென் னுரைகளெல்லா
மிருகா தரம்பொரு வேலென்ற புல்லரை யேத்தறியே
னருகா தரங்கணி காட்டுநங் காழி யரனையுற்றேனை
றருகா தரந்தடுத் தேன்றொடுத் தேன்மூத் தமிழ்சொல்லவே. ()

சொற்பனங் காயமென் றெண்ணியப் பாலவஞ் சூழ்பசுநூல
விற்பனங் காய விறைஞான மாமது மேவியபி
னுற்பனங் காய மலராமென் றூர்க்கு முரைத்தருளா
நிறபனங் காய புகழ்க்காழி மாமலை நிற்பவனே. (௬௫)

நினக்கடங் காத மயக்கந் தரவெற்ப நேரிழைபூந்
தனக்கடங் காத னிறைத்ததென் றூலென்ன சாற்றுவன்யான்
வனக்கடங் காதவன் மேனியில் வீச மலர்ந்தபுட்ப
வினக்கடங் காதங் கமழ்காழி நாத ரிருங்கிரிககே. (௬௬)

கிரிசர மன்றி யிருசர * மன்றிக் கிடைத்தவெம்போர்க்
ரிசர மம்புக வென்றருள் காழிக் கடவுளர்தா
ரிசர மம்புயத் தோன்பாக ஞகலைத் தாண்டருளும்
புரிசர மங்கையர் மங்கல நாணைப் படைத்ததுவே. (௬௭)

படைக்கலங் காரந் தகன்காட்டு நாளுன் பதங்களுக்கே
யடைக்கலங் காரங் குரிமின்னல் யாக்கையென் றுய்ந்துவினை
யிடைக்கலங் காரஞ் சலிக்கருள் காழி யிறைநடத்து
நடைக்கலங் காரம் பெறுமூர்த்தி யாதி நரையிடையே. (௬௮)

---

* இருசரமாவன - வனசரம், நதிசரம்.

நரமா மடங்க லுரிசாத் தியசட்டை நாதவனந்
தரமா மடந்தை திருக்கோலக் காவிற் றவஞ்செயநல்
வரமா மடங்கலு மாலோடு தந்து மணஞ்செய்வித்த
பரமா மடந்தவிர்த் தாளென்னைக் காழிப் பராபரனே. (கூகூ)

பரத முடிக்க நடஞ்செய்யுங் காழிப் பரமர்வைகு
மிரத முடிசசி காத்தெதிர் நோக்கி யிறைஞ்சிமுன்னாள்
விரத முடித்த திருநக ரித்திரு மின்னொடன
வரத முடிக்கட் கரங்கூப்பி நிற்குமொர் மாமணியே. (க00)

---

வாழி சிகர மலைச்சட்டை நாயகர் வானவரான்
வாழி சுருதியுங் காழியந் தாதியும் வாழிபொன்னி
வாழிதென் காழித் தலத்தன்பர் யாவரும் வாழியென்றும்
வாழிதென் கூடற் சிதம்பர நாத மகாமுனியே.

காழியந்தாதி முற்றுப்பெற்றது.

திருச்சிற்றம்பலம்

---

உ

கணபதிதுணை.

# விலவவனத்தந்தாதி

உரைபாடம்.



கோகிலாம்பிகைமாலை.

முத்துக்குமாரக்கடவுள் பஞ்சரத்தினம்.

இவை

புதுவை - கலவை சுப்பராயசெட்டியார்
தருமவித்தியாசாலைத்
தமிழ் உபாத்தியாயர்களு ளொருவராகிய
சுப்பு-இராமசாமிமுதலியாரால்
இயற்றி,
திருப்பாதிரிப்புலியூர் இயற்றமிழாசிரியர்
ம-ா-ா-ஸ்ரீ-க-ரா-சிவசிதம்பரமுதலியாரவர்கள்
முன்னிலையில் பரிசோதித்து,
புதுவை - தபெல்லியோம்
ம-ா-ா-ஸ்ரீ-சுப்புமுதலியாரவர்கள் முயற்சியால்

சென்னை
எம்பரஸ் ஆப் இந்தியா அச்சுக்கூடத்தில்
பதிப்பிக்கப்பட்டன.

1884

உ

# சிறப்புப் பாயிரங்கள்

இஃது

புதுவை-கலவை சுப்பராயசெட்டியார்
தருமக் கல்விச்சாலைத் தமிழ்ப் பிரதமபண்டிதராகிய
ம - ா - ா - ஸ்ரீ,

## சாமி. பொன்னுப் பிள்ளையவர்கள்

சொல்லிய

### நிலைமண்டிலவாசிரியப்பா.

திருவளர்புரிசையந் திகழ்மாடகூடந்
தருவளர்நந்தனஞ் சங்கனம்பயில்வயல்
அனந்தருசாலை யனந்தநீர்கல்விக்
கனந்தருசாலைக் கவினறச்சாலை
நல்வளனுறவிவை நாளும்பொலிதரூஉம்
வில்வவனமாம் வியநகரதனில்
வானுலாஞ்சிகரியும் வனிதையருறுப்பைத்
தேனுலாநறுமலர் தெரிக்குமதான்று
படிந்தவர்வினையெலாம் பாறச்செய்துவிண்
படிதரச்செய்திடும் பண்பாராவியும்
ஆசையுளாருட னண்டர்மற்றெவரு
மாசையாப்பூசைசெய் தன்புறுகாட்சியு
மினனொளிமழுங்க விலகுசீரானுச்
சினகரமமர்ந்துச் செகமெலாம்புரக்க
மணமகிழ்ந்தருவரம் வழங்கிடுமெங்கைதயாங்
தனதனைத்தனதனுச் சந்தமுடையான்
னேமிலாத்தேவர்க டொடர்வருகாட்சியான்
காமீசற்கும் கவின்குயிலமைக்கும்
அந்தாதிமாலை யறைகெனத்தளிக்குச்
சந்ததந்தரும கர்த்தனுஞ்சார்ந்தவர்
புலக்கரம்பகற்றிப் போதநீர்தேக்கி
கலைச்சிவப்பயிரா காற்றினைச்சிக்கைதயி

னூட்டியேயின்ப னாஞுநுகர்ந்திடக்
கூட்டுமெய்ஞ்ஞானக் குரவன்மொழிதர
நூல்வழிப்பொருளி னுட்பமதுணர்ந்து
நால்வகைச்சொன்மலர் நன்காய்ந்தெடுத்தே
ஈரைங்குற்றமு மகற்றியிந்நெறியே
ஈரைங்கவினு மிலகுறயார்க்கு
மந்தாதிமாலையா வமைவுறத்தொடுத்தே
யந்தாதியம்மை யடியிற்சாத்தினனாற்
புதுவைபத்திவரியே புனிதருலாவரும்
புதுவையம்பதியிற் பொருந்தியதூயோன்
கற்றோர்க்கிருகணான் கல்வியந்திருவினன்
பெற்றோர்பிறந்தார் பேணுசற்பாத்திரன்
திங்களாக் கண்ணியான் செஞ்சடைத்தேங்கிய
கங்காகுலத்தினன் கலைக்கடல்கடந்தோன்
சுப்பராயவேள் சுதனெனச்சொற்றிடும்
தப்பிலாராம சாமிநாவலனே.

---

இஃது

திருவாவடுதுறை யாதீன மஹாவித்துவான்

திரிசிரபுரம்

ஸ்ரீ மீனாட்சி சுந்தரம்பிள்ளையவர்கள் மாணாக்கராகிய

சென்னைக் கவர்ன்மெண்டு

நார்மல் பாடசாலைத் தமிழ்ப்புலவர்

ம - ள - ள - ஸ்ரீ, சோடசாவதானம்

தி. க. சுப்பராய செட்டியாரவர்களியற்றிய

நேரிசையாசிரியப்பா.

மணிவெறிதரங்க வாரிதிபுடைசூழ்
தினிநிலவரைப்பிற் செறிதரச்சூழ்போய்ப்
பரந்ததிசைவிழுங்கும் பாயிருட்படலையை
விரிந்ததன்கரங்களான் மெலிவுபட்வள்ளி
வாரிவாய்மடுத்துச் சீரிதிற்றேக்கெறிந்
தரிறபவுலாய்த்தரும் பரிதிமான

வல்லொளிமழுக்கும் வில்லொளிரார
நடுவட்கிடந்த வடுவின்மாமணிபோற்
சொல்வரம்பிகந்த பல்வளப்பொலிவாற்
சேணாடுவக்குஞ் சோணாடுமுதலிய
தமிழ்ச்சுவைதேக்கிய தன்மைசானாட்டுட்
குமைப்பிலாவறங்கூர் கொடுங்காலத்துந்
தன்வளஞ்சிறிதுந் தணப்பிலதாகி
மண்ணியபசிப்பிணி வாய்க்கோட்பட்ட
பல்லுயிரொருங்கு படரினுந்தாங்குங்
குன்றாவளத்திற் பின்றாதோங்கி
நடுவாய்நிற்றலி னடுநாடென்னப்
பொலியுமிந்நாட்டுட் கலிதபவிளங்கும்
புதுவைநன்னகருள் விதுதவழ்ந்துறங்கும்
போகுயர்குடுமிச் சேருசெறிதருநிறை
நைமிசவனமுத னலஞ்சால்வனங்கள்
மெய்ம்மிகப்புளகித்து விரிகரங்கூப்பும்
வில்வவனத்துறை யல்லுறழ்மிடற்றுப்
பொன்வீழ்த்தன்ன புரிசடைக்கடவு
டன்புகழமைந்த சால்பினத்தாதியுங்
குலவருட்கடலாங் சோமானிடப்பா
னிலவுகுயிலம்மைமே னிகரில்பாமாலையு
மொருபெருங்குரவற் குரவுபூண்ட
வள்ளிலைநெடுவேல் வள்ளன்மீது
பஞ்சரத்தினமும் பாற்படுபுலவர்
நெஞ்சமுவப்ப நிலைபெறவுரைத்தன
னன்னவனியாரெனி லறையக்கேண்மின்
பொன்னின்வளஞ்சால் பொருப்பெனயாவருங்
காண்வரக்கற்ற மாண்பமைகல்வியன்
புண்ணியஞ்சான்ற தண்ணியநடையினன்
சுரநதிக்குலத்திற் றுரிசறத்தோன்றியோன்
பவ்வநீருலகிற் பலசமயங்களுட்
சைவமேசிறந்தெனத் தானறிகற்றோன்
புகலுமப்புதுவைத் தகவுசானகரின்
சுப்புராமசாமி
யொப்பில்குணத்தி னொருவன்றானே.

---

இஃது

ஷை மீனாட்சி சுந்தரம்பிள்ளை யவர்கள்

மாணாக்கரி லொருவராகிய திருப்பாதிரிப்புலியூர்

இயற்றமிழாசிரியர்

ம-ள-ள-ஸ்ரீ,

க. ரா. சிவசிதம்பரமுதலியாரவர்கள்சொல்லிய

வெண்பா.

வில்வவனக்குயிற்கோர் மேதகுபாமாலையந்தச்
செல்வவனக்குயிலைச் சேர்ந்தவல—மல்கு
மொருசேவற்கந்தாதி யுற்றுரைத்தான்சுப்புத்
திருராமசாமிவல்லோன் றேர்ந்து.

---

இஃது

கும்பகோணம் பழனிமுத்தையர் குமாரர்

சிவகுருநாதஐய ரவர்களியற்றிய

விருத்தம்.

அந்தாதியிலாக் காமீசனந்தாதலர்த்தாட்கந்தாதி
சிந்தாகுலமாலைச்செருக்குந் தெய்வக்குயிற்குத்திருமாலை
லைபந்தார்நீபம்புனைவாற்குப் பஞ்சரத்நம்பணித்தனிர்தான்
எந்தையென்பார்க்கிங்கரத்தானி ராமசாமியியலுறவே.

---

இஃது புதுப்பாளையம்

ம-ள-ள-ஸ்ரீ,

அ. பெரியசாமிப் பிள்ளையவர்க ளியற்றிய

எழுசீர்க் கழிநெடிலாசிரிய விருத்தம்.

திருவளர்வில்லைக் கோகிலாம்பிகைக்குஞ்
செப்பருந்தொண்டர்கள் பரவு
மொருவனர்திருக்கா மீஸ்வரர்தனக்கு
மாலையந்தாதிக ளுரைத்த—

தருவளர்புதுவைச் சுப்பராயப்பேர்ச்
சறகுணன்றவச்சுதன் கங்கை
குருவளாகுலத்தி ராமசாமிப்பேர்
கொண்டநாவலன் புவிக் கினிதே.

---

துஃஇ

புதுவை

கல்வை சுப்பராயசெட்டியார்

தருமக கல்விச்சாலைத் தமிழுபாததியாயர்

ம-ா-ா-ஸ்ரீ.

உ-சு-மாணிக்கப்பிள்ளையவர்கள் சொல்லிய.

கலிவிருத்தம்.

ஐந்திரத்தின மாலையொடந்தாதி
விந்தையார்வில்வை யந்தலமேவுறுங்
கந்தனற்குயில் காமீசர்மூவாகருந
தந்தனன்ராம சாமிப்புலவனே.

---

இஃது ஷை கலவை சுப்பராயசெட்டியார்
கல்விச்சாலைத் தமிழுபாத்தியாயர்

ம-ா-ா-ஸ்ரீ,

கு-இரத்தினப்பிள்ளையவர்கள் சொல்லிய

கட்டளைக் கலித்துறை.

அந்தாதிசைவரி பாம்பொழில்வில்லை யாககர்வாழ்
அந்தாதிவேரிவத் தாய்குன்றாய வடியவரில்
அந்தாதிமாலை விருத்தவங்க வணிந்ததிரு
அந்தாதிசையடைந் தான்ராமசாமி யதிஞனன்றே

---

சிவமயம்.

# வில்லைவனத்தந்தாதி.

## உரைபாடம்.

---

### விநாயகர் காப்பு.

---

### கட்டளைக்கலித்துறை.

திருமாதுறை வில்லைக் காமீசர் வாரிசச் சேவடிக்கே
பருமாதுலகம் புகழவந்தாதி யணிகுவனால்
பருமாதுளங்கனி பாசாங்குசமும் பரித்தவுணக்
கருமாதுவைதத வலம்புரியானையைக கைதொழுதே.

(இதன்பொருள்.) திருமாது உறை வில்லை காமீசர் வாரிசம சேவடிக்கு-இலக்குமியானவள் வாசஞ்செய்கின்ற வில்லையென்னும் தலத்தி லெழுந்தருளிய திருக்காமீசரது தாமரையாகிய சிவந்த திருவடிக்கு, அரு மாது உலகம் புகழ அந்தாதி அணிகுவன்-அருமையாகிய பிரியத்தைத் தருகின்ற உலகமானது புகழும்படி அந்தாதியென்னும் பிரபந்தத்தைச் சாத்துவன், பரு மாதுளங்கனி பாசாங்குசமும் பரித்து - பருத்த மாதுளம்பழத்தையும் பாசாங்குசமுதலிய வற்றையுந் தரித்து, அவுணன் கரு மா துலைத்த வலம்புரியானையை கைதொழுது - இராக்கதனாகிய கறுத்த கஜமுகாசுரனை வதைத்த வலம்புரி விநாயகனை வணங்கி, ஆல்-அசைநிலை. ஏகாரம்-ஈற்றசை, ஏன்-தோன்றா வெழுவாய், அணிகுவன்-பயனிலை. அந்தாதி-செயப்படுபொருள்.

## முருகக்கடவுள் துதி.

தருமந்தழைத்த புகழ்வில்லை மேவிய தற்பரன்மேல்
அருமந்தவின்றமி ழந்தாதிசொல்ல வலர்கடம்பு
மருமந்தணிற்றரிக்கும் முருகாவென் மனத்திருந்து
பொருமந்தப் புத்தியை நீக்கிநல்வாக்கருள் புண்ணியனே.

(இ - ள்.) தருமம தழைத்த புகழ் வில்லை மேவிய தற பரன்மேல் - தருமமானது தழைத்திராநின்ற கீர்த்தியினையுடைய வில்லையென்னுந் தலத்தி லெழுந்தருளிய சிவபெருமான்மீது, அருமந்த இன் தமிழ் அந்தாதி சொல்ல அலர கடம்பு - அருமருந்தென்ன வினிமையாகிய தமிழினாலே யந்தாதியென்னும் பிரபந்தத்தைச் சொல்ல கடப்பமலர மாலையை, மருமந்தனில் தரிக்கும முருகா என் மனத்திருந்து - மார்பினிடத் தணியப்பெற்ற முருகக்கடவுளே அடியேன் மனதினிடத்திருந்து, பொரும் மந்தப்புத்தியை நீக்கி நல்வாக்கு அருள் புண்ணியனே - கெடுக்கா நின்ற மந்தவறிவை நீக்கி நல்ல மதுரமானவாக்கைப் புண்ணியசொரூபனே கிருபைசெய்வாயாக, நீ-தோன்று எழுவாய். அருள - பயனிலை. வாக்கு-செயப்படுபொருள்.

### திருவக்கறை யாதீனம் கல்விமடத்தி
### லெழுந்தருளியிருக்கும
## ஸ்ரீ - மெய்ஞ்ஞானதேசிகர் துதி.

சடிலங்களக்கறை நீக்கியடியர்க டம்பொருட்டால்
படியின் மெய்ஞ்ஞான முனிவனெனவந்த பாண்டரங்கன்
அடியவன் வல்வினை யேகவருள்செய்த வத்தனுரைப்
படிவில்லையீச னந்தாதி பகர்ந்தனனே.

(இ - ள்.) சடிலம் களக்கறை நீக்கி அடியர்கள், தம்பொருட்டால் - சடாபாரத்தையும் விஷகண்டத்தையு மன்பர்கள் நிமித்தமாக வகற்றி, படியில்மெய்ஞ்ஞான முனிவனென வந்த பாண்டரங்கன்-பூமியில் மெய்ஞ்ஞான தேசிகனென்று சொல்லும்படி யவதரித்த சிவபெருமான், அடியவன் வல்வினை ஏக அருள்செய்த அத்தன்-அடியேனது தீவினை நீங்கும்படி கிருபைசெய்த கடவுளினது, உரைப்படி வில்லை

ஈசன் அடியில் அந்தாதி பகர்ந்தனன் - கட்டளைப்படி வில்வையென்னுந் தலத்தி லெழுந்தருளிய திருக்காமீசரது பாதத்திலணிய அந்தாதியென்னும் பிரபந்தத்தைச் சொல்லினன், ஏகாரம் - ஈற்றசை.

## நூல்.

சீரண்டர் போற்றுமெழில் வில்வைமேவிய செம்மலனைப்
பேரண்டமீன்றவள் பாகனைப் பேதையென் பீழைவினை
ஏரண்டச்சூழ லெறிமாருதத்தினை யேற்றிநெஞ்சே
காரண்டவாழ்த்திப் பணிவா யருள்செய்வர் நன்குனக்கே.

(இ-ள்.) சீர் அண்டர் போற்றும் எழில் வில்வை மேவிய செம்மலனை - சிறப்புவாய்ந்த தேவர்கள் துதிக்கின்ற அழகுபொருந்திய வில்வையென்னுந் தலத்தி லெழுந்தருளிய சிவபெருமானானவரும், பேர் அண்டம் ஈன்றவள் பாகனை - பெரிய வண்டங்களைப் பெற்றவளாகிய உமாதேவியாரை யிடப்பாகத்தில் வைத்தவரும், பேதையென் பீழைவினை ஏரண்டச்சூழல் எறி மாருதத்தினை - பேதமையையுடைய வெனது துன்பத்திற் கேதுவாகிய வினையாகிற வாமணக்குக் காட்டை முறித்துத் தள்ளும் பெருங் காற்றானவருமாகிய சிவபெருமானை, ஏற்றி நெஞ்சே நாரண்ட வாழ்த்திப்பணிவாய் அருள்செய்வர் நன்குனக்கு - மனமே எதிர்கண்டு தரிசித்து அன்பு பொருந்தத் துதித்து வணங்குவாய் கிருபை செய்வார் அதுனக்கு நன்மையாகும், ஏகாரம் - ஈற்றசை. ()

செய்யவ னந்தரி யாழியற்காவிடங் கின்றசெம்மால்
வெய்ய வனந்தழற் கூட்டிடும் வீபர்ச்சு வில்வடிகொள்
மெய்ய வனந்தங்கு வளகச்சீர் வில்வை மேயவனின்
றுய்ய வனந்தரு தாளையென் றொன்று தொழுதுய்யவனே.

(இ-ள்.) செய்யவன் நந்து அரி ஆழியற்கா இடம் நின்ற செம்மால் - செவ்விதானவன் சங்கினங்களை யடித்துக் கொண்டோடுகின்ற பாற்கடலை யிடமாக வுடைய திருமாலுக்காக வாலகால விஷத்தைப் புசித்த கடவுளே, வெய்ய வனம் தழற் கூட்டிடும் வீபர்ச்சு வில்வடிகொள் மெய்ய - வெவ்விதாகிய காண்டாவனத்தை யக்கினிபகவானை [illegible]

பிகச்செய்த வர்ச்சுனனது வில்லடியைக்கொண்ட திரு மேனியையுடையவனே, அனம் தங்கு உவளகம சாவில வை மேயவ-அன்னப்பறவைகள் வசிக்கின்ற வாவிகள்சூழ் ந்த சிறப்பையுடைய வில்லையென்னுந் தலத்தி லெழுந்தரு ளிய சிவபெருமானே, நின் தூய்ய வனந்தரு தாளை எஞ்ஞா ன்று தொழுது உய்வன்-பரிசுத்தமாகிய வழகுபொருந்திய உன்திருவடியை எக்காலம வணங்கிப் பிழைப்பன், ஏகாரம் ஈற்றசை. (௬)

உய்யத்தருக்கணஞ் சூழ்வில்வைநாதனையொண்கதைவாட்
கய்யத்தருக்கண வாழிதந்தோனறனைக் கண்டுதொழ
வய்யத்தருக்கனல் வானோர்க்குமேற்பதம வாய்க்குமிது
மெய்யத்தருக்கணஞ் சிந்திரியங்களை வென்றநெஞ்சே.

(இ-ள்.) உய்ய தருக்கணம சூழ வில்லை நாதனை-பிழை க்க விருட்சக்கூட்டங்கள் சூழ்கின்ற வில்லையென்னும் பதியி லெழுந்தருளிய கடவுளானவரும, ஒண் கதை வாள் கை அத்தருக்கு அனல ஆழி தந்தோன்றனை-பிரகாசம பொருந்திய கதையும் வாளையுந் தாங்கிய கரங்களையுடைய திருமாலுக்குச் சக்கரத்தைக் கொடுத்தவருமாகிய சிவபெ ருமானை, அ தருக்கு அண் அஞ்சிந்திரியங்களை வென்ற நெஞ்சே கண்டு தொழ-அந்தச் செருக்குப்பொருந்திய பஞ் சேந்திரியங்களைச் செயித்த மனமே தரிசித்து வணங்க, வய யத்தருக்கு அனல் வானோர்க்கு மேற்பதம வாய்க்கும இதுமெய் - பூவுலகி லுள்ளவர்களுக்கு அரசனாகி தேவர் களுக்கு மேலாகியபதவி கிடைக்கும் இந்தக்காரிய முண்மை.

நெஞ்சாரவானவர் வாழ்த்துறும்வில்லை நிமலனைநீள்
அஞ்சாரலாருங் கைலைவெற்பானைமுன் னாழியெழு
நஞ்சாரருட்கடலேக்குணக்குன்றினை நாதனையே
மஞ்சாரமாதர் மயக்கொழித்தேத்தி வணங்குவிரோ.

(இ-ள்.) நெஞ்சார வானவர் வாழ்த்துறும் வில்லை நிம லனை-மனம்பொருந்தத் தேவர்கள் வாழ்த்துகின்ற வில்லை யென்னும்பதியி லெழுந்தருளிய சிவபெருமானானவரும், நீள் அம் சாரல் ஆரும் கைலைவெற்பனை - நீண்ட வழகிய மலைப்பக்கம்பொருந்திய கைலாசகிரியையுடையவரும்,முன்

ஆழியெழு நஞ்சு ஆர் அருட்கடலை குணக்குன்றினை நாதனை-முற்காலத்தில் சமுத்திரத்தி லுண்டாகிய விடத்தைப்புசித்த கிருபா சமுத்திரமானவரும் குணமலையானவருமாகிய கடவுளை, ஏமஞ்சார் அ மாதர் மயக்கு ஒழித்து ஏத்தி வணங்குவிர் - இன்பம்பொருந்திய அந்தமடவார்களது மயக்கத்தை நீக்கி துதித்து வணங்குவீர்கள், ஏ-அசை. (ச)

வணங்கரியானய னிந்திரன் மற்றுளவானவரும்
வணங்கரியானெழின் மாடங்களார்வில்லை வாழும்பிரான்
வணங்கரியானனன் றந்தைமூந்தும்புர வானடைக்கா
வணங்கரியாக்கி யடிமுடிவைத்துய்ம்மின் மானிடரே.

(இ - ள்.) வணங்கரியான் அயன் இந்திரன் மற்றுள வானவரும் வணங்கரியான் - கரிய நிறமுடைய திருமாலும் பிரமனும இந்திரனும் மற்றுமுண்டாகிய தேவர்களும் வணங்குதற்கருமையானவனும், எழில் மாடங்கள் ஆர் வில்லை வாழும் பிரான் - அழகுபொருந்திய உப்பரிகைகள் சூழ்ந்த வில்லையென்னும் பதியில் வாழுகின்ற கடவுளானவரும், வணம் கரியானனன் றந்தை-வளப்பம்பொருந்திய யானைமுகக்கடவுளுக்குப் பிதாவானவரும், மூந்தும் புர வான் அடை காவணம் கரியாக்கி அடி முடி வைத்துய்ம்மின் மானிடரே-ஆகாயத்தையடைத்துச் செல்லாநின்ற திரிபுரமாகிய நகைப்பந்தலை நகைத்தெரித்தவருமாகிய பரமசிவனது திருவடிகளை மாந்தர்களே சிரத்திலணிந்து பிழைப்பீர்களாக. (ரு)

மானிடமாகமுன் கோடிதவஞ்செய்து வந்துநெஞ்சே
தானிடமாப்பொரு ளேவற்கு நைந்தனை தண்ணிமையத்
தேனிடமாரவைத்தோன் வில்லைச்சேர்ந்திலைசெம்பொன்
பேணிடமாட்டிலை வீட்டிலைதோற்றும்பெருங்கருவே. [சிறப்

(இ-ள்.) மானிடமாக முன் கோடிதவஞ்செய்து வந்து நெஞ்சே - மனமே மானிடப் பிறப்பாக முற்காலத்தி லநேகந் தவஞ்செய்து பிறந்தும், இடம் மா பொருள் ஏவற்கு நைந்தனை-வீட்டிற்கும் பெருமைபொருந்திய திரவியத்துக்கும் ஏவலாளருக்கும்வருந்தினை, தண் இமையத்தேன் இடமாரவைத்தோன் வில்லை சேர்ந்திலை-குளிர்ச்சிபொருந்திய,

பருவதராசன்பெற்ற தேனனைய சொல்லையுடைய வுமா தேவியாரை யிடப்பாகத்தில்வைத்த சிவபெருமானெழுந் தருளிய வில்லையென்னும் பதியை யடையவில்லை, செம பொன் சிறு பேன் இடமாட்டிலே தோற்றும் பெருங்கரு வீட்டிலே - திரவியத்தைச் சிறியபேனவ்வளவு கொடுத்த தேயில்லை செனிக்குமிருத பிறப்பை யழிக்கவில்லை, ஏ-அசை. (௬)

கரும்பானங் கங்கரிந் துள்ளாவிகுன்றக் கடைக்கணித்தான்
அரும்பானங் கங்கரி யார்க்கும் பொழில்வில்லை யம்பதியில்
வரும்பானங் கங்கரி சேருது தாழ்ந்திட வைத்துநல்லா
தரும்பானங்கங்கரிப்பான் வேண்டிநண்ணுதல் தக்கதன்றே.

(இ - ள்.) கரும்பான் அங்கம் கரிந்து உள்ளாவி குன்ற கடைக்கணித்தான் - மன்மதன் றேகமானது சாமபராகக் கரிந்து கடத்தினுள்ளே யிராநின்ற வான்மா குறைந்துபோகக் கடைக்கண்ணினுற் பார்த்தவன், அரும்பான் அங்கங்கு அரி ஆர்க்கும் பொழில் வில்லையம்பதியில் - அரும புகடோறும் அவ்வவ்விடங்களில் வண்டுகள் சத்திக்குஞ் சோலைகள் சூழ்ந்த வில்லையென்னும்பதியில், வரும்பால் நம் கம் கரிசு வருது தாழ்ந்திடவைத்தும் - வழுந்தருளியிருக்கின்ற சிவபெருமான் நமது சிரம் குற்றமானது அடையாது தம்மை வணங்கும்படிக்கு நமக்குண்டாக்கிவைத்தும் நாமப்படி வணங்காமல்,கங்கு அரிப்பான் - நமது சிரத்தை கழுகு அரிக்கும்படி, நல்லார் தரும்பானம் வேண்டி நண்ணுதல் தக்கதன்று - மாதர்கள் கொடுக்கு மதர்பானத்தை விரும்பி யவரைச் சேருதல் தகுதியன்று, ஏ-அசை. (௭)

கன்னலங்கார மட்டவார்விழிதன காசிதந்த
மென்னலங்காரவயில்செண்டுபூங்குமிழேர்செய்மூத்தென்
றன்னலங்கார வுரைப்பதல்லால் வில்லை யன்னறனைப்
பன்னலங்காரணி கண்டவென்றேநிலை பாவிநெஞ்சே.

(இ-ள்.) கன்னு அலங்காரம் மட்டவார் விழி தனம் காசிதந்தம்-பொருந்திய சிங்காரத்தையுடைய மாதர்களது கண்களும் கொங்கைகளும் மூக்கும் பற்களும், என்னு அலங்கு ஆரம் அயில் செண்டு பூங்குமிழ் ஏர்செய் முத்து

என்று-நினைக்கின்ற வசையுமாலை யணிந்த வேலும் புட்பச் செண்டும்குமிழம்பூவும் அழகையுடைய முத்துக்களும் என்ற, அண்ணல் அங்கு ஆர உரைப்பதல்லால்-பெருமையாக வவிடத்துப் பொருந்தச் சொல்லுவதல்லாமல், வில்லை அண்ணல்தனை பண் நலம் காரணி கண்டவென்று ஓதிலை பாவிநெஞ்சே - வில்லையென்னூர் தலத்தி லெழுந்தருளிய சிவபெருமானை இசையுடனே நன்மையாக விடத்தைத் தரித்த கண்டனேயென்று சொல்லவில்லை பாவியாகிற மனமே. (௮)

சேரமன்னன்செய்த பூசைக்குகந்தவ செய்யவில்லை
யூரமன்னன்புதந் தாளென் றுரைத்திலி ரோதிடுங்கண்
ணூரமன்னம்புசி யாதுண்டுவீணி னடிக்கினம
னூரமன்னப்பொங்கு கோபத்துச் சார்பொழு தார்கதியே.

(இ-ள்.) சேரமன்னன் செய்த பூசைக்கு உகந்தவ-சேரமான் பெருமாள்செய்த பூசைக்குச் சந்தோஷித்தவனே, செய்ய வில்லையூர - செவ்விதாகிய வில்லைப் பதியையுடையவனே, மன்னு அன்பு தந்து ஆளென்று உரைத்திலிர்-நிலைபெற்ற பத்தியைக்கொடுத் திரக்ஷிப்பாயென்று துதித்திரில்லை, ஓதிடும் கண்ணூரம் அன்னம் புசியாது உண்டு வீணில் நடிக்கில்-சொல்லாநின்ற கள்ளுநீரைச் சாதம்புசியாதுண்டு வீணாகக் கூத்தாடினால்,நமனூர் அம்மன்ன பொங்கு கோபத்து சார்பொழுது ஆர்கதி - இயமன் சமுத்திரத்தைப்போற் கொதிக்குங் கோபத்தோடு வருஞ்சமயத்தில் எவருங்கட்காதாரம், ஏ-ஈற்றசை. (௯)

கண்டனஞ்சேர் செய்களார் வில்லைவாழுங் கரியநிறக்
கண்டனஞ்சேலென்று நல்லடியார்களைக் காத்தவனேர்
கண்டனஞ்செல்செண்டு கொண்டவள்காணக்கனகவவைக்
கண்டனஞ்சேருதிர்தாவென்று நிர்த்தனைக்காணக்கண்ணே.

(இ-ள்.) அனம் கண்டு சேர்செய்களார் வில்லைவாழும் கரியநிறம் கண்டன் - அன்னப்பறவைகள் பார்த்துச் சேருகின்ற வயல்நிலங்கள் பொருந்திய வில்லைப்பதியில் வாழுகின்ற கரியநிறத்தையுடைய கண்டத்தையுடையவன், அஞ்சேலென்று நல்லடியார்களை காத்தவன் - பயப்படாதீர்

கொன்று நல்லடியார்களை யிரக்ஷித்தவன், ஏர் கண தனம் சேல் சென்டு கொண்டவள் காண-அழகுபொருந்திய கண களும் கொங்கைகளும் சேற்கெண்டைகளையு மலர்ச்செண டுகளையு முவமையாகக்கொண்ட பார்வதிதேவியார் காணும படி, கனகவனக்கண் தனஞ்சே குதித்தாவென்ற நிர்த்த னமே காண கண்ணே-பொன்னமபலத்தினிடத்துத் தனஞ் சேகுதித்தாவென்ற தாளத்துடன்செய்தநடனத்தைக் கண களே தரிசிப்பீராக. (௧௦)

காணத்தரங்கத் துயின்றோனயன்மக வான்களித்துப்
பேணத்தரங்க நடிப்பவர் வில்லையிற் பிஞ்ஞகனார்
மாணத்தரங்கத்துப் பெண்ணைவைத்தோர்தம வனசமலர்த்
தாணத்தரங்கன்ம சன்மந்தனக்கது சத்தியமே.

(இ-ள்.) கான தரங்கம் துயின்றோன் அயன் மகவான் களித்து பேண் அத்து அரங்கம் நடிப்பவர்-இயாவருங்கா ணும்படி பாற்கடலிற் பள்ளிகொண்ட திருமாலும் பிரம னும் இந்திரனு முவகைகொண்டு விரும்புமெல்லையாகிய பொன்னமபலத்தினிடத்து நிருத்தம் புரிபவர், வில்லையிற் பிஞ்ஞகனார் மாண் அத்தர் - வில்லைப்பதியி லெழுந்தருளியி ருக்கும் பிஞ்ஞகனென்னு நாமமுடையவர் மாட்சிமைபொ ருந்திய கடவுள், அங்கத்து பெண்ணை வைத்தோர் தம வன சமலர் தாள் நத்து-தேகத்தி லுமாதேவியாரை வைத்தவரது தாமரைமலர்போன்ற திருவடியை யர்ச்சிப்பாயாக, அரம் கன்ம சன்மந்தனக்கு அது சத்தியம்-அவ்விச்சையே வினை யால்வரும்பிறவிக்கு அரமாகும்இது உண்மை, ஏ-அசை. (௧௧)

சத்தியத் தன்பொழிற் சூழ்வில்லை வாழ்பவன் றனழியா
சித்தியத் தன்னரு ளார்நீறுடன்பட சேமித்தின்னே
அத்தியத்தக்கை யெழுப்பெண்ணைமாலை யமைந்தமடல்
பத்தியத்தம்ம மென்றாரமன்றிற் புகருவனே.

(இ-ள்.) சத்தி அத்தன் பொழில்சூழ் வில்லை வாழ்ப வன்-பார்வதி தேவியாருக்கு நாயகன் சோலைகள்சூழ்ந்த வில்லையென்னுந் தலத்தில் வாழுகின்றவன், அழியா சித்தி யத்தன் அருள் ஆர் நீறுடன் படம் சேமித்து இன்னே - எக் காலு மழியிலாத சித்தனை இருபையால் விபூதியுடனே

படத்தைச் சித்தஞ்செய் திப்போதே, அத்து இயம் தக்கை எழு பெண்ணை மாலை அமைத்து மடல்-கிரமமுள்ளவாத்தியமாகிய பம்பையொலி கோஷிக்கப் பனைமடலினுல் குதிரையை யுண்டாக்கி மடலே, பத்தி அதநம் நலமென்றுயர மன்றில்பகருவன் - அன்பாகவத்தநட்சத்திரம நன்மையென்றுயேறிச்செலுத்தச் சபையிறசொல்லுவன், ஏ-அசை.

பகரவரியபொன் மன்றுணடஞ்செய் பதமென்னெஞ்சில்
புகரவரியற்புதங்கொளச் செய்யெழில் பொங்கு வில்லவை
நகரவரிய மிடுதுடையென்பிழை நாடல்கண்டாய்
அகரவரியக கரங்கண்முன்போல வமர்பவனே.

(இ - ள்.) பகரவரிய பொன்மன்றுள் நடஞ்செய் பதம் என்னெஞ்சில் - சொல்லுதற்கரிதாகிய கனகசபையில் திருநடஞ்செய்கின்ற தேவரீர் திருவடி என்மனதில, அரவு அரி அற்புதங்கொள புக செய் - சேஷசயனத்தையுடைய திருமால் ஆசசரியங்கொள்ளும் வண்ணம் புகும்படி கிருபை செய்வாயாக, எழிலபொங்கு வில்லைநகர வரி அமிடுதுடை - அழகுமிகுந்த வில்லைநகரத்தையுடையவனே பாதிக்கின்ற பாபத்துக்களை நீக்கு, என்பிழை நாடல் - என் குற்றத்தை நோக்காதே, அகரவரி அக்கரங்கள் முன்போல அமர்பவனே - அகரவெழுத்தானது எழுத்துக்களுக்கு முதன்மையானதுபோல விருக்கின்றவனே, கண்டாய்-அசை. (கக)

அவசங்கடங்கொளக்காலன்சினங்கொண்டணுகினெஞ்சே
நவசங்கடர்ந்துவெண் முத்தீன்றுலவிடு நன்செய்களும்
துவசங்கடங்குரன் முற்றமுஞ்சூழ்ந்து துலங்குவில்லவைச்
சிவசங்கடர்தொலைத தாள்வாயென்றஞ்சக் கரஞ்செபியே.

(இ-ள்.) நெஞ்சே கடம் அவசங்கொள காலன் சினங் கொண்டு அணுகில்-மனமே முறைமையாக மதிமயக்கங் கொள்ள யமன் கோபங்கொண்டென்னை நெருங்கிடில், நவம் சங்கு அடர்ந்து வெண்முத்து ஈன்று உலவிடும நன்செய் களும்- புதிதாகிய பணிலங்களானவை நெருங்கி வெண்மையாகிய முத்துக்களைப்பெற்றுத் திரிகின்ற நன்செய் நிலங்களும், துவசங்கள் தங்கும் நன்முற்றமும் சூழ்ந்து துலங்கு வில்லை சிவ-கொடிகள்பொருந்திய நல்ல வீதிகளுஞ்

சூழ்ந்து விளங்குகின்ற வில்லையென்னுந் தல[illegible] தருளிய சிவபெருமானே, சங்கடந்தொலைத்து ஆள்வாயென்று அஞ்சக்கரம் செபி-துன்பத்தைநீக்கிக் கிருபையோடளிப்பாரென்று பஞ்சாக்கரத்தைச் செபிப்பாய், ஏ-ஈற்றசை (கச)

அஞ்சக்கரத்தநல் வில்லைக்கரச வரக்கருளம்
அஞ்சக்கரனை யொறுத்தவன் பூசைக் ககமகிழ்ந்தே
அஞ்சக்கரத்தை யளித்தோயெனை யிவ்வலர்மதியால்
அஞ்சக்கரமென வாட்டனன் றோசொ லருளண்ணலே.

(இ-ள்.) அஞ்சக்கரத்த நல் வில்லைக்கு அரச-பஞ்சாக்கரத்தையுடையவனே நல்ல வில்லையென்னுந் தலத்துக்குத் தலைவனே, அரக்கர் உளம் அஞ்ச கரனை ஒறுத்தவன பூசைக்கு அகமகிழ்ந்தே அம் சக்கரத்தை அளித்தோய்-இராக்கதர்களது மனமானது நடுங்கும்படி கரனென்னுமரக்கனைச் சங்கரித்த திருமாலினது பூசைக்குச் சந்தோஷித்து அழகிய சக்கராயுதத்தைக் கிருபை செய்தவனே, எனை இ அலர் மதி ஆலமென சக்கரமென வாட்டல் நன்றோ சொல அருளண்ணலே-அடியாளாகிய வென்னை யிந்தப்பரந்த சந்திரன் விடத்தைப்போலவுஞ் சூறைக் காற்றைப்போலவும வருந்தச்செய்குதல் நல்லதோ கிருபாமூர்த்தியாகிய சுவாமி சொல்லுக. (கரு)

அன்னையுநீகுரு வப்பனொடன்னையு நீயெனவே
என்னையுற்றெல்லு மிரவுநின்றேத்த மெனக்கிரங்காய்
நன்னையும்பர்க்கரு நல்லமுதேநவில் தேபவத்தியான்
மன்னையுத்தெய்த்திட னிற்கழகோ வில்லைவாழ்சடரே.

(இ-ள்.) அன்னையுநீ குரு அப்பனொடு அன்னையுநீ என-இயான் வழிபடுதெய்வமுநீ ஆசாரியனுநீ அப்பனொடு [illegible]று, என்னையுற்று எல்லும் இரவுநின்று ஏத்தும் எற்கு இரங்காய்-நினைத்துப்பகலிலு மிரவிலுந் துதிக்குமேனுக்கு மனமிரங்குவாய், உம்பர்க்கு நன்னல் அருநல் அமுதே நவில் தேபவத்த இயான்-தேவர்களுக்குக் கிட்ட கருமையாகிய நல்ல வமிர்தமே மெலிந்தே பிறவித் தி வடிவேன், என் அலுத்து எய்த்திடல் நிற்கு அழ

சோர வில்லை வாழ் சுடரே-பூமியில் அழுத்திவைத்தல் தேவர்ருக்கு அழகாகுமோ வில்வையென்னூர் தலத்திலெழுந்தருளிய ஞானதீபமே. (கசு)

சுயம்பிறகாசர் எழில்வில்வையீசர் துணைவரைமேல்
சுயமபிறகாலெனச் சென்றரவிந்தங் கலந்தசெல்வி
பயம்பிறகாதநன் மார்க்கமதாய்வரப் பக்குவமா
வியமபிறகாலெங்குஞ் சென்றிசைதேடு மெழிற்குருகே,

(இ-ள்.) சுயம்பிறகாசர் எழில் வில்வை ஈசர் துணைவரைமேல்-இயற்கை யொளியுடையோர் அழகிய வில்வையென்னூர் தலத்தி லெழுந்தருளிய சிவபெருமானினது நீண்டமலையின்மீது, சுயம காலென சென்று அரவிந்தம கலந்த செல்வி - தடாகத்தினிடத்திற் காற்றைப்போலச் சென்று போய் தாமரை மலரிற்சேர்ந்த இலக்குமியையொத்த பெண்ணுக்குப், பயம் பிறகாத நன்மார்க்கமதாய் வர பக்குவமா இயம்பு - அச்சமான துண்டாகாத நல்லவழியாக வரும்படி பக்குவமாகச் சொல்லு, இறகால் எங்கும் சென்று இசை தேடும் எழில் குருகே-சிறகினு லெவ்விடத்தும் பறந்துபோயுணவைத் தேடுகின்ற வழகியநாரையே, பிற - அசைநிலை. பிறக்காதவென்றது - எதுகை நோக்கிப் பிறகாத வென்றுறுத் தொகுக்கபபட்டது. (கஎ)

கேதனந்தங்குநன் முற்றங்கள்சூழ்ந்து இளரும்வில்லை
நாதனந்தம்வினை தீர்த்தருள்வோன்வரை நன்னுமன்பர்
மாதனந்தண்டுத லில்லாமற்றேடி வருகுவனென்
றேதனந்தஞ்சொலிப் போனவர்வந்தில சேந்திழையே,

(இ-ள்.) கேதனம் தங்கு நல் முற்றங்கள் சூழ்ந்து இளரும் வில்லைநாதன்-துவசங்கள் பொருந்திய நல்ல வுபரிகைகள் சூழ்ந்து விளங்காநின்ற வில்வையென்னும் பதியி லெழுந்தருளிய சிவபெருமான், நந்தம் வினை தீர்த்து அருள்வோன் வரை நன்னும் அன்பர்-நம்முடைய தீவினையை நீக்கி கிருபைசெய்பவனுமாகிய கடவுளது மலையிலிருக்கும் நாயகா, மா தனம் தண்டுதலில்லாமல் தேடி வருகுவனென்று-மகத்தாகிய திரவியத்தைத் தடையில்லாமற் சம்பாதித்து வருவேனென்று, ஏது அந்தம் சொலி போனவர் வந்தி

ஸர் வந்திழையே-அனந்த காரணங்களைச் சொல்லிச சென்றவர் பாங்கியே வரவில்லை. (சஅ)

வந்தனந்தந்தண்டர்கோன் பூசைசெய்வில்லைவாழ்பரனைப்
பந்தனந்தந்தனில் வந்தருளென்று பரவல்விட்டுத்
தந்தனந்தந்த மெனநடிப்போர்தமைச் சார்ந்தவாகள்
சந்தனந்தந்தனம் பூசுவர்சீதந் தலைவிதியே.

(இ - ள்.) வந்தனம் தந்து அண்டர்கோன் பூசைசெய் வில்லை வாழ் பரனை - இந்திரன் வணக்கஞ்செய்து அரசித்த வில்லையென்னுந் தலத்தில் வாழுகின்ற சிவபெருமானை, பந்தம் நந்து அந்தனில் வந்தருளென்று பரவல விட்டு-பாசபந்தமானது கெட்டுப்போகுங் காலமுடிவில் எழுந்தருளிவந்து கிருபைசெய்வாயென்று வணஙகுதலைவிட்டு, தந்தனந்தந்தமென நடிப்போர்தமை சார்ந்து அவாகள்-தந்தனந்தந்தமென்ற தாளத்துடன் நிருத்தஞ்செய்யும் பரதையர்களைச்சார்ந் தழமடவாரகளது, சந்தனம தந்தனம் பூசுவர் சீ தந்தலைவிதியே - கொஙகைகளிடத்தில் சந்தனத்தைப் பூசாநிற்பர் சீ யிதென்ன காரிய மவாகள் தலைவிதியிருந்தபடியாம். (சக)

சீதந்தருந்தண்டலையோங்கிய வில்லைச் செல்வரொற்றைச்
சீதந்தருக்குஞ் செவ்வேளுக்குந் தந்தைதற் சேவிக்கநச்
சீதந்தருக்கொழிந் தைந்தவிப்போர்க்கொரு திண்கதியாஞ்
சீதந்தருளுவர் நெஞ்சேநீ யவ்வணஞ் செய்யையின்னே.

(இ - ள்.) சீதந்தரும் தண்டலை ஓங்கிய வில்லை செல்வர் - [illegible]பொருந்திய சோலைகளோங்கி யிராநின்ற வில்லை [illegible]தாயகர், ஒற்றை சீதந்தருக்கும் செவ்வேளுக்கும் [illegible] தற் சேவிக்க நச்சி தந்தருக்கு ஒழிந்து ஐந்தவிப் [illegible] ஒரு திண்கதியாம் சீ தந்தருளுவர் - சிறப்புபொ[illegible] ஒன்றாகிய கொம்மையுடைய விநாயகமூர்த்திக்கும் [illegible]வருக்கும் பிதாவானவர் தம்மை வணங்கவிரும் [illegible] தங்கள் செருக்கைக்கைவிட்டுப் பஞ்சேந்திரியங்களை விடயங் [illegible] செல்லவொட்டாமல் அடக்கவல்லவர்க் கொப்பற்ற [illegible] சம்பத்தைக் கிருபைசெய்வர், நெஞ்சே நீ [illegible] இன்னே செய்யை - மனமே நீ யவ்வகையாக [illegible]ரதே செய்வாயாக. (உ0)

இடப்பாகமாருமை யாணேசர் வில்வையரேத்தமன் றில்
கடப்பாக மாலபணி வேங்கையுங்காணச்செய் நாயகனூர்
படப்பாகமாருத வூணரவால்முன் படுவிடத்தை
அடப்பாகமாரமு தாகக்கொண்டெனக் காதரவே.

(இ-ள்.) இடப்பாகமார்உமையாள்நேசர்-இடதுபாகத்திலிருக்குமுமாதேவியாருக்கு நேசமானவர், வில்வையர்-வில்லைபதியையுடையவர், மன்றில் வைத்த நடப்பாகமால்பணிவேங்கையும் காணச்செய் நாயகனார்-கனகசபையில் அடியார்க்கு இரக்க நிருத்தவழகு பெருமைபொருந்திய பதஞ்சலியாரும் வியாக்கிரபாதருமத் தரிசிக்கச்செய்த முதன்மையானவர், படப்பாகம மாருதம உண் அரவால முன் படுவிடத்தை அடு அப்பாகமார அமுதாகக்கொண்டு எனக்கு ஆதரவு-படப்பாப்பைக சிரத்திலேயுடைய காற்றை யுணவாகக்கொண்ட சர்ப்பத்தினால பண்டைககாலத்தில் பாற்கடலிலுண்டாகிய வாலகால விடத்தைப் பாகமபண்ணிய வந்தப் பக்குவப்பட்ட வமுதாகக்கொண்ட சிவபெருமான கண்டீர அடியேனுக்குப் பாதுக்காப்பாகவுள்ளவர், ஏ-அசை. (௨௯)

ஆதரவில்லை யென்றேங்கித் துதிப்பவர்க் காரருள்செய்
பூதரவில்லியர் வில்லையில் வாழ்பவர் பொற்கங்கையர
மாதரவில்லச் சடிலர்முன் மாதவர் வேள்விவந்த
நீதரவில்லம ருங்கரத்தேந்து செம்மேனியரே.

(இ-ள்.) ஆதரவு இல்லையென்று ஏங்கி துதிப்பவர்க்கு ஆர் அருள்செய் பூதரவில்லியர்-வேறோராதாரமு மில்லையென்றேக்கமுற்றுத் துதிசெய்தவடியார்களுக்கு நிறைந்தவருளை செய்கின்ற மகமேருகிரியை வில்லாகவுடையவர், வில்லையில் வாழ்பவர் பொன் கங்கையாம் மாது அரவு இல்லம் சடிலர் - வில்லையென்னூர் தலத்தி லெழுந்தருளியிருக்கும் கடவுள் அழகிய கங்கையாகிற பெண்ணுக்குஞ் சர்ப்பத்துக்கும் வீடாகிற வேணியையுடையவர், முன் மாதவர் வேள்வி வந்த நீதரவில் அமரும் கரத்து ஏந்து செம்மேனியர்-முற்காலத்தில் தாருகாவன விருடிகள் செய்த யாகத்திலுண்டாகிய நீதியை யனுப்பவதனைப் பிரசைசம்பொருந்திய கையிலெடுத்திருக்கிய சிவந்தமேனியையுடையவர், ஏ-அசை. (௩௰)

செங்கரும்பாரஞ் சொரிவில்லைநாதனைச் சேர்ந்தணையாக
கொங்கரும்பாரத் தனத்தியைவாட்டுங் கொடியமதி
மங்கரும்பாரதை விட்டேகநல்ல வனமுடையீர்
இங்கரும்பாரவி வந்திடச்சேவ லிசைத்திலென்னே.

(இ-ள்.) செங்கரும்பு ஆரம்சொரி வில்லைநாதனைசேர்ந் தணையா-சிவந்தகரும்புகள் முத்துக்களை யுதிர்க்கின்றவயல் களசூழ்ந்த வில்லையென்னுமபதியி லெழுந்தருளிய சிவபெ ருமானைப்பொருந்தியணையாத, கொங்கரும்பு ஆர் அத்தனத் தியை வாட்டும கொடியமதி - கொங்குமுகைகளையொத்த வந்தக்கொங்கைகளையுடைய பெண்ணை வாட்டுகின்ற கொடு மையாகிய சந்திரனானது, மங்கு அரும் பாரதைவிட்டு ஏக நல்லவனமுடையீர்-கெடுதலில்லாத பூமியைவிட்டுப்போக நலல வழகையுடைய பாங்கிகளே, இங்குரவி அருமபா வந் திட சேவல் இசைத்தில் என் - இவவிடத்தில் சூரியனுதித் துவரச் சேவலானது கொக்கரித்ததில்லை யாதுகாரணம், ஏ-அசை. (௨௩)

இலைநிகர்வேலனை யீன்றவன்வாழ்வில்லை யோர்வரையோ
தலைநிகரத்தல் செய்யாதுரைப்பா யொருதையலுக்கோ
வுலைநிகழும்மெழு கொத்துளம்வாடியிங் கொல்கின்றாய்
தொலைவிகழ்நற்றவ முற்றோய்நிற்கேது துயருறவே.

(இ-ள்.) இலைநிகர் வேலனை யீன்றவன் வாழ்வில்லையோர் வரை யோ தலை-இலைபோன்ற வேலாயுதத்தையுடைய முரு கக்கடவுளைப் பெற்றவனாகிய சிவபெருமான் வாழுகின்ற வில்லையென்னுந் தலத்திலிராநின்ற வழகியமலையினிடத் துச் சென்றதை, நீ கரத்தல் செய்யாது உரைப்பாய் ஒரு தையலுக்கோ-நீ மறைக்காமற் சொல்லுவா யொரு பெண் ணுக்காகவோ, உலைநிகழும்மெழுகொத்து உளம வாடி யிங்கு ஒல்கி நின்றாய்-உலைக்களத்தி லிருக்கின்ற மெழுகைப்போல மனது வாட்டமுற் றிவ்விடத்திற்றுவண்டுநின்றாய், தொலை விகழ் நற்றவம் உற்றோய் நிற்கு ஏது துயருறவு - பூர்வத்தில் செய்துள்ள நல்ல தவத்தையுடையவனே யுனக்குத் துன் பஞ்சம்பவித்ததேது, ஏ-அசை. (௨௪)

வேதவனத்த னெழில்வில்லைவாழும் விமலனற்சு
வேதவனத்தன் றொழும்பரனென்னிலின் மேவுநதய
வேதவனத்தடை யின்றிச்செய்வேனெற்கு வேறொருநை
வேதவனத்தங்க வுண்பேன் வரச்சொல்லை மெலலியலே.

(இ - ள்.) வேதவனத்தன் எழில் வில்லை வாழும் விமலன் - வேதாரண்ணியத்தையுடையவன் அழகிய வில்லையென்னும்பதியில் வாழுகின்ற பரிசுத்தமானவன், நல் சுவேத அனத்தன் தொழும பரன் என்னிலில் மேவும் தயவு எது- நல்ல வெண்மையாகிய வமிசவாகனத்தையுடைய பிரமன் வணங்குகின்ற கடவுள் எனதுவீட்டில் வருகின்ற தயவென்ன, அவனம் தடையின்றி செய்வேன் எற்கு வேறொருநைவு எது-அலங்கரிததலில் தடையில்லாமல் அலங்கரித்துக் கொள்ளுவேனினியெனக்கு வேறேயொரு துன்பமில்லை, அ அனம் தங்க உண்பேன் மெல்லியலே வரச்சொல்லை- அந்த அனனம் உடலிற்றங்கப் புசிப்பேன் பெண்ணே வரச சொல்வாயாக. (உரு)

சொல்லியநணப விடைகொங்கை கண்டிலை சோர்ந்தவெலை
நல்லியலாகத் தணிப்பதுமிவ்வகை யோநயந்து
பல்லியமென்று மிசைகுமவில்வைப்பரன் பண்டனலாப்
புலலியகாமஞ் சுடுமென்றலோசம பொறுத்தனனே.

(இ - ள்.) சொல்லிய நண்ப இடை கொங்கை கண்டிலை- என்க் காறுதல் சொல்லிய நேயனே நான் குறிப்பித்த தலைவியின் இடையையுந் தனங்களையுமநீ குறித்தறிந்தாயில்லை, சோர்ந்தவெலை நல்லியலாக தணிப்பதும் இவ்வகையோ- வாட்டமுற்றிருக்குமென்றலை நல்லதன்மையவாகவிரும்பித் தணிக்கின்றது இத்தன்மைதானோ, பல்லியம் என்றும் இசைக்கும் வில்லை பரன் - பல வாத்தியங்களெப்பொழுதுங் கோஷிக்குஞ் சிறப்பினையுடைய வில்லையென்னுந் தலத்தி லெழுந்தருளிய சிவபெருமான், பண்டு அனலா புல்லிய காமம் சுடுமென்று அலோசம் பொறுத்தனன்-முற்காலத்தில் அக்கினியாகச்சேர்ந்து காமவிகாரமானது கொளுத்துமென்றல்லவோ கங்கையைத் தாங்கிக்கொண்டிருந்தனன், எ-அசை. (உசு)

# வில்வவனத்தந்தாதி.

பொறுத்தவித்தார மிருநகவில்லன் புகழையெல்லாம்
நிறுத்தவித்தாரணி யோர்மகிழ்வில்லை நிமலன்வெற்பில்
கறுத்தவித்தாரணி கூந்தலகலா நனையாமன்மெய்வே
றுறுத்தவித்தாரங் குடைந்தாயொருசுனை யொண்டொடியே.

(இ-ள்.) பொறுத்த வித்தாரம் மிரும் நகவில்லன் - சகலத்தையுந் தாங்கின விசாலமிருந்த மேருகிரியை வில்லாக வுடையவன், புகழையெல்லாம நிறுத்த இ தாரணியோர மகிழ் வில்லை நிமலன் வெற்பில் - கீர்த்தியையெல்லாம நிலைக்கச்செய்த விந்த வுலகிலுள்ளோர மகிழ்கின்ற வில்லையென்னுந்தலத்தி லெழுந்தருளிய கடவுளினது மலையில், கறுத்த அவி தார் அணி கூந்தல் கலை நனையாமல் மெய் வேறு உறுத்த-கறுத்தத்தைலமு மாலையுமணிந்த வளகமும வஸ்திரமும் நனையாமல் தேகத்தில் வியாவையுண்டாக, வித்தாரம் ஒண்டொடியே ஒருசுனை குடைந்தாய் - பெருமையாகப் பிரகாசமுள்ள வளையல்களை யணிந்தவளே ஒரு சுனையிடத்தில் ஸ்நானஞ்செய்தா யிது புதுமையே. (௨௭)

தொடியாகநாகந் தரித்தவவான்றொழு தூயவெள்ளைப்
பொடியாகநாக வுரிதனைப்போர்த்திடும் புண்ணியனே
மிடியாகநாகந் துரந்திடத்தேக மெலிந்துநைந்தேன்
கடியாகநாகப் பொழில்வில்லைமேவிய காரணனே.

(இ-ள்.) தொடியாக நாகம் தரித்தவ வான்றொழு தூய வெள்ளை பொடி ஆக-கங்கணமாகச் சற்பத்தைத் தரித்தவனே வானுலகத்தோர் வணங்கத்தக்க விபூதியையணிந்த தேகத்தையுடையவனே, நாக வுரிதனை போர்த்திடும் புண்ணியனே-யானையினது தோலைப்போர்வையாகத் தரித்த புண்ணியசொரூபனே, மிடியாகு அ நாகம் துரத்திட தேகம் மெலிந்து நைந்தேன் கடி - தரித்திரமாகிய வந்தக்கு ரங்கு துரத்திக்கொண்டுவரத் தேகமான திளைத்து வருந்தினேனதனைக்கடிந்துவிடு, ஆகும் நாகம் பொழில் வில்லை மேவிய காரணனே-ஆச்சரிய மாகாயத்தை யளாவிய புன்னையுமாகிய சோலைசூழ்ந்த வில்லையென்னுந் தலத்தி லெழுந்தருளிய காரணனே. (௨௮)

காரணனாரணன் கஞ்சத்திருவைக் களித்துரம்வை
நாரணன்பூரண மாயறியாப்பர னண்ணுமவில்வைப்
பேரணன்மாரண மில்லாதவன்புகழ் பேசவெள்ளை
வாரணன்சீரண வாழ்விமமையேபெற வந்திடுமே.

(இ - ள்.) காரணன் ஆரணன் கஞ்சத்திருவைகளித்து உரம வை நாரணன் - காரணமானவன் பிரமன் தாமரை மலரி லெழுந்தருளிய லிலக்குமியை மார்பினிடத்து வைக்கும் திருமாலிவர்கள், பூரணமா அறியாப்பரன் நண்ணுமவில்லை பேரணல்-நிறைவாக வறியக்கூடாத சிவபெருமான் சீர்பொருந்திய வில்வையென்னுந் தலத்தி லெழுந்தருளிய பெரியகடவுள், மாரணமிலலாதவன் புகழ் பேச வெள்ளை வாரணன் சீர் அண அ வாழ்வு இமமையே பெற வந்திடும் - அழிவில்லாதவன் கீர்த்தியைச்சொல்ல விந்திரனது செல்வம்பொருந்திய அந்த வாழ்வான திப்பிறப்பிலே தானே வந்துசேரும், ஏ-அசை. (௨௯)

வந்தருச்சித்த சகலாங்கசுந்தரி வாழ்த்தலுக்கு
வந்தருச்சித்திக டந்தருள்செய்வில்லை வள்ளனிற்கார்
வந்தருசித்தத்தை யொத்திடுந்தேர்வரு கின்றதுநி
வந்தருச்சித்தஞ் செயநற்கலையணி வண்டிருவே.

(இ-ள்.) வந்து அருச்சித்த சகலாங்கசுந்தரி வாழ்த்தலுககு உவந்து-கிட்டி பூசைசெய்த சகலாங்கசுந்தரியினது துதிககுச் சந்தோஷித்து, அருசித்திகள் தந்தருள்செய் வில்லை வள்ளல்- அருமையாகிய சித்திகளைக் கிருபைசெய்த வில்லையென்னுந்தலத்தி லெழுந்தருளிய சிவபெருமானது, நிற்கு ஆர்வந்தரு சித்தத்தையொத்திடும் தேர் வருகின்றது-உனக்கன்பைத் தருகின்ற மனதையொத்த ரதமானது வருகின்றது, நிவந்து அருச்சிதஞ்செய நல் கலை அணி வண் திருவே-உயர்ந்த வணக்கஞ்செய்ய நல்லவஸ்திரத்தை யணிந்துகொள் வளப்பமாகிய இலக்குமியே. (௩௦)

திருக்கணைஞ்சேர்நுத லார்வில்வையீசர் திகழ்வெண்பொடி
மருக்கணைஞ்சேர்விழி யீரெற்றிடாமல் வகையற்றந்தேச
தருக்கணைஞ்சேர்ந்ததென் றேயசத்தன்னைத் தடிந்துவிட்டா
துருக்கணைஞ்சேத முறுமோவிதென்ன மதியுமக்கே.

(இ-ள்.) திரு கண் அம சேர் நுதலார் வில்வை ஈசர் திகழ் வெண்பொடி-சிறந்த சேதத்திரத்தை யழகாக நெற்றியிலுடையவரும் வில்வையெனனுந்தலத்தி லெழுந்தருளியவருமாகிய கடவுளினது விளங்காநின்ற திருநீற்றை, மருங்கு அணை நஞ்சு எர் விழியீர் எற்கு இடாமல் வகையற்று அநதோ - பக்கத்தில் பொருந்திய விடத்தையொத்த வழகிய கண்களையுடைய பாங்கிகளே யெனக்கு இடாமல் வகையில்லாமலையோ, தரு கணம் சேர்ந்ததென்று அசந்தன்னை தடித்துவிட்டால் - மரத்திலிருக்கும் பிசாசம் பிடித்துக்கொண்டதென் றூட்டை வெட்டிப்போட்டால், உருக்கணம சேதமுறுமோ உமக்கு இ தென்னமதி-தேகத்திற் பொருந்தியகாங்கை நீங்கிப்போகுமோ வுங்களுக் கிதென்னபுத்தி, ஏ - ஈற்றசை. (கக)

மதியாறுசூடும் பிரான்றிகழ்வில்வ வனத்திநெஞ்சே
சதியாறுதன்னிற் செலாதின்று நீசென்று சார்ந்திறைதாள்
துதியாறு வெம்பகை யுட்டீருஞ்சன்மந் தொலையுநல்ல
ததியாறுதலெந்த நாளுமுண்டுநன்மை தக்கசெய்தே.

(இ-ள்.) மதி ஆறு சூடும் பிரான் திகழ் வில்வவனத்தில் நெஞ்சே-சந்திரனையுங் கங்கையுந்தரித்த கடவுள் விளங்காநின்ற வில்வவனமென்னுந்தலத்தில் மனமே, சதியாறு தன்னில் செலாது இன்று நீ சென்று சார்ந்து இறைதாள் துதி-சதிமார்க்கத்தில் நடவாது இப்போது நீ போய்ச்சார்ந்து சிவபெருமான் றிருவடிகளைத் துதிப்பாய், வெம்பகை உள தீரும் சன்மம் தொலையும் நல்லதி-கொடிய பஞ்சேந்திரியங்களாகிய பகைக ளுனக்குள்ளே தீர்ந்துவிடும் பிறப்பறுப்போ மிது நல்லசமையம், ஆறுதல் எந்நாளுமுண்டு நன்மை தக்க செய்து-எக்காலமு மோய்வுண்டு இதன்மையான காரியம் தக்கவையான பத்திபுரிந்து, ஏ-அசை.()

செய்தவத்தாலண்டர் தங்களைவாதிக்குந் தீங்குறுசூர்
நய்தவத்தானென்று சேயினைத்தந்தவ னும்வில்வை
அய்தவத்தாறுறு மார்க்கந்தனித்தர்த் தகங்குலினில்
மெய்தவத்தானென் றிடவந்ததற்குணைத் தாண்மெல்லியே.

(இ-ள்.) செய் தவத்தால் அண்டர்தங்களை வாதிக்கும் தீங்
கு ஆர் சூர்-செய்கின்ற தவத்தினால் தேவர்களை வாதஞ்செய்த
கொடுமையாகிய சூரபன்மன், நய் தவ தாஒரு சேயினை
தந்தவன் நாடும் வில்வை அய்-நைந்துகுன்றத் தா ஒருபிள்
ளையைத் தந்தவனாகிய சிவபெருமான் எழுந்தருளியிருக்கும்
வில்லையென்னுந் தலத்திலிருக்கிற தலைவன், தவத்தாறு
றும் மார்க்கம தனிதது அர்த்தகங்குலினில் - காறைபொ
ருந்தியவழியில் தனியாக வர்த்தராத்திரியினில், தவ மெய்
தாள் நொந்திட வந்ததற்கு நைந்தாள் மெல்லி-மிகவுஞ் சரீ
ரமும் பாதமும நோகவந்ததற்கு வருந்தினாள் பெண்ணான
வள், ஏ-அசை. (௯௩)

மெல்லியகஞ்சனும விண்டுவுநீமதி விண்மணிநீ
துல்லியவெல்லியு மல்லியுநீபல தோற்றமுநீ
மல்லியவாகம நீமறைநீசொலு மந்திரநீ
யல்லியம்பூந்தட மார்வில்லைநின் றிடு மற்புதனே.

(இ-ள்.) மெல்லிய கஞ்சனும் விண்டுவும் நீ மதி விண்மணி
நீ - மிருதுவாகிய தாமரைமலரிலிருக்கும் பிரமனுந் திரு
மாலுந் தேவரீர சந்திரசூரியர்களுந் தேவரீர், துல்லிய எல்
லியும் அல்லியு நீ பலதோற்றமுநீ-சுத்தமான இரவும் பக
லுந் தேவரீர் பலகாட்சியுந் தேவரீர், மல்லிய ஆகமநீ
மறைநீ சொலும் மந்திரம்நீ-வண்மையாகிய வாகமங்களுந்
தேவரீர் சதுர்வேதங்களுந் தேவரீர் ஓதத்தக்க மந்திரங்களா
னவையுந் தேவரீர், அல்லியம் பூந்தடமார் வில்லை நின்றி
டும் அற்புதனே - அகவிதழ்களோடுங்கூடிய வழகியமலர்
வாவிகள்சூழ்ந்த வில்லையென்னுந் தலத்தி லெழுந்தருளிய
வற்புதமானவரே. (௯௪)

நினைவைத்தருதி யுனதிணைப்பாதத்தை நெஞ்சிலுன்ன
நினைவைத்தருமயன் பூசித்திடக்கதி நேரருள்வோய்
நினைவைத்தருணம தன்செய்கின்றான்சற்று நின்றிருக்கண்
நினைவைத்தருசொற் பொலிமேவுவில்லையில் நின்மலனே.

(இ-ள்.) உனதிணைப்பாதத்தை நெஞ்சிலுன்ன நினைவை
தருதி-தேவரீர துபயதிருவடிகளை மனதில் தியானிக்க
நினைப்பைக் கொடுப்பாய், நினைவைத்து அரும் அயன் பூசித்
திட கதி நேர் அருள்வோய் - தேவரீரை வைத்து அருமை

பாகிய பிரமன் பூசைசெய்ய மோட்சத்தை நேராகக் கிரு பைசெய்தவனே, நில் னைவை தருணம மதன் செய்கின றான் சற்று நின்றிருக்கண் நினை-நிலைத்ததனைபத்தைச சம யத்தில் மன்மதன்செய்கின்றான் கொஞ்சமுனது திருநேத் திரத்தால் நோககு, வைத்தருசொறபொலி மேவு வில்வை யில் நின்மலனே - வைககோல் தரப்பட்ட செற்பொலிகள பொருந்திய வில்வைப்பதியி லெழுந்தருளிய பரிசுத்தமான வனே. (௬௫)

மேவியநந்த விசித்திரமாக்கவி வீணர்கணமேற்
கூவியநந்தனுங் கொண்டாடசசொல்லிக குலேந்துநல்ல
சீவியகந்தத் திரிந்துநின் றேனெழிற செங்கமல
வாவியகந்தங்கு சீர்வில்வையாயென் மலமகற்றே.

(இ - ள்.) மேவி அநந்த விசித்திரமா கவி வீணாகள் மேல் - சென்று அநேக சித்திரங்கள்பொருந்திய பாமாலை யை யுஞத்தர்கண்மீது, கூவி அநந்தனும கொண்டாட சொல்லி குலேந்து-சததித்து ஆதிசேடனும புகழவுரைத்து வருந்தி, நல்ல சீவியம நந்த திரிந்துநின்றேன்-நல்ல பிழைப்ப புகெட்டுதிரிந்து நிற்கின்றேன், எழில் செங்கமல வாவி அனம் தங்கு சீர் வில்வையாய் என் மலமகற்றே - அழகிய செந்தாமரை மலர்கணிறைந்த தடாகத்தில் அமசப்பறவை கள்பொருந்திய சிறப்பினையுடைய வில்வையென்னுந் தலத திலெழுந்தருளி யிருக்குஞ் சிவபெருமானே யெனது மும்ம லங்களேயும கனேக. (௬௬)

மலமாற்றிடுமுத்த மாகநிசூழ்வில்வை வாழ்பரமர்
சலமாற்றிடாத முகமுனைப்பாசடை தன்சிரமேற்
குலமாற்றிடக்கிள்ளி வீசயன்றுக்குங் குணத்தரொன்ற
னலமாற்றலிற்புன் கவிக்குமுவர்தரு ளைக்குவரே.

(இ-ள்.) மலமாற்றிடும் மா முத்தநதி சூழ் வில்வை வாழ் பரமர் - தன்னிடத்துவந்து ஸ்நானஞ்செய்பவர்களது மும் மலத்தையும் நீக்கும் பெருமைபொருந்திய முத்தநதியானது சூழ்கின்ற வில்வையென்னுந்தலத்தில் வாழுகின்ற கட வுள், சலம் ஆற்றிடாத முக முனை பாசடை தன்சிரமேல்- சாபத்தைத் தணிக்காத குரங்கானது முற்காலத்தில் பசிய

வில்லைகளைத் தனது தலையின்மீது, குலம் ஆற்றிட் கிள்ளி வீச மன்னுக்கும் குணத்தர்-கூட்டமாகப் பொறுக்கக் கிள்ளியெறிய வரசனுகச் செய்விக்குங் குணத்தையுடையவர், என்றன் நலம் ஆற்றல் இல் புன் கவிக்கும் உவந்து அருள் நல்குவர்-எனது நன்மையும் ஞானமுமில்லாதவற்பமான செய்யுளுக்குஞ் சந்தோஷித்துக் கிருபைசெய்குவர், ஏ-அசை. (௬௭)

நல்லவரம்பெறு வானரசிங்க நயந்தருச்சித்
தொல்லவரம்பெருந் தண்ணருள்பெற்ற வொளிகொள்வில்
வல்லவரம்பெருக் கார்சடையாரொரு வண்டமழையை[லை
வெல்லவரம்பெனக் கொண்டுதிரிதல் வெகுசிறப்பே.

(இ-ள்.) நல்லவரம் பெறுவான் நரசிங்கம் நயந்து அருச்சித்து - நல்லவரத்தையடைய நரசிங்கமானது விரும்பிப் பூசைசெய்து, ஒல்ல வரம் பெரும் தண்ணருள் பெற்ற ஒளிகொள் வில்லை வல்லவர் - கைகூட் மேன்மையான பெரிய தண்ணிய வருளையடைந்த கீர்த்திவாய்ந்த வில்லையம்பதியில் எழுந்தருளிய வல்லமையுடையவரும், அம்பு எருக்கு ஆர் சடையார் ஒரு வண்டமழையை - கங்கையு மெருக்கும் பொருந்திய சடையினையுடையவருமாகிய கடவுள் ஒன்றாய் வளப்பமாகிய தழையை, வெல்லவரு அம்பென கொண்டு திரிதல் வெகுசிறப்பு-வெல்லவராநின்ற அம்பென்றுசொல்லிக் கையிற்கொண்டு திரிகின்றது வெகு சிறப்பாயிருக்கின்றது, ஏ-அசை. (௬௮)

கொடிமீனவன்கரங் கொண்டைந்துபாணன்கொடியவெம்
படிமீனவாகக வந்தானெனக்குயில் பன்னினபைந் [போர்
தொடிமீனவனெனக் கூடலிற்போய்மணந்துன்னிச்சொல்
[லும்
படிமீனவன்னிப் பொழிலாரும்வில்லைப் படித்தவற்கே.

(இ-ள்.) கொடிமீன் அவன்கரங்கொண்டு ஐந்துபாணன் கொடிய வெம்போர் - மீனக்கொடியையேந்த வலிமையாகிய கையிற்கொண்டு பஞ்சபாணத்தையுடைய மன்மதன் வெவ்விதாகிய யுத்தத்தை, படிமீ கவம் நக வந்தானென குயில் - பூமியின்மீது நாதனம் விளங்கச்செய்ய வந்தானென்று குயில்களானவை, பைந்தொடி மீனவனென்ன கூடலிற்

போய் மணந்து உன்னி - பசியவளையல்களை யணிந்த பார்வதி தேவியாரைப் பாண்டியனென்று சொல்லும்படி மதுரைக்குச்சென்று விவாகஞ்செய்துக்கொண்டு, உன்னி சொல்லும்படிமீன் அவன்னிப்பொழில் ஆரும் வில்லை படிந்தவற்கு பன்னின - நினைத்துச் சொல்லும்படியான அந்த வன்னிமரங்கள் நட்சத்திரமண்டலம்வரையி லளாவிய வில்வவனமென்னுந்தலத்தி லெழுந்தருளிய கடவுளுக்குச் சொல்லின, ஏ-அசை. (௮௯)

வில்லங்கடுக்கை நதிவேய்ந்தவன்வில்லை விண்ணவன்கை
வில்லங்கடுக்கை யிருவாளிவைத்தவன் வேண்டவுடன்
வில்லங்கடுக்கையிற் கொண்டுண்டவனை விரைந்துதொழ
வில்லங்கடுக்கையில் லாச்சீருநண்ணி விளங்கநெஞ்சே.

(இ-ள்.) வில்லம் கடுக்கை நதி வேய்ந்தவன்-வில்வமுங் கொன்றைமலரையுங் கங்கையையுஞ் சடாபாரத்திற் றரித்தவனும், வில்லைவிண்ணவன் - வில்லையென்னுந் தலத்தி லெழுந்தருளிய சிவபெருமானும், கை வில அங்கு அடுக்கு ஐ இரு வாளி வைத்தவன் வேண்ட உடன் - கையினிடத்தத்தனுவும் அவ்விடத்து அடுக்கிய வழகிய பெருமைபொருந்திய பாணத்தையும் வைத்தவனாகிய திருமால் துதிக்கவுடனே, வில் அம் கடு கையிற்கொண்டு உண்டவனை யிரைந்துதொழ - ஒளிபொருந்திய கடலிற்றோன்றியவிடத்தைக் கையினால் வாங்கிப் போசித்தவனுமாகிய கடவுளைத் துரிதமாய் வணங்க, இல்லங்கள் தக்கு இல்லா சீரும் நண்ணி விளங்க நெஞ்சே - வீடுகளுங் கீழ்மைத்தனமில்லாத சிறையும்பொருந்தி விளங்குவாயாகமனமே. (௯௰)

ஏகம்பத்தானைநல் வில்லையில்வாழ்கின்ற வீசனையன்
பாகம்பத்தானை யுரியானென்றுன்னிப் பணிந்தெழுந்து
ஏகம்பத்தானைத் தொழுத்தேத்திடாதவர் நாய்நரியின்
றேகமபத்தானைத் தெடுத்துவனத்திற் றிரிகுவரே.

(இ-ள்.) ஏகம்பத்தனை நல் வில்லையில் வாழ்கின்ற ஈசனை அன்பா - திருவேகம்பமென்னுந் தலத்தையுடையவரும் நல்ல வில்லையில் வாழ்கின்றவருமாகிய சிவபெருமானைப் பத்தியாக. கம்பத்த ஆனையுரியானென்று உன்னி பணிந்து

எழுந்து-கட்டுக்கடங்காத திறமையுடைய யானைத்தோலைப் போர்த்தவனேயென்று நினைந்து வணங்கின்று, நாகம்ப ஐந்தெழுத்து ஓதிடாதவர் நாய் நரியின் - நாத்தழும்ப பஞ்சாக்கரத்தைச் செபிக்காதவர்கள் நாய்நரிகளின், தேகம் நைந்து பத்தா எடுத்து வனத்தில் திரிகுவர்-சடலம்வருந்திப் பத்துதரமாகவெடுத்துக் காட்டில் திரிகுவர், ஏ-அசை, தன்-சாரியை தானென்று நீட்டல் விகாரமாயிற்று. (௬௧)

திருவம்பரவு மெழில்வில்லை வாழ்பவன் றீங்குறுசூர்
கருவம்பரவுத லில்லாதயில்விட்ட கந்தன்றந்தை
மருவம்பரவுத லில்லாதவென்னை வலிந்துதன்பொற்
பெருவம்பரவிந்தத் தாடொழவைத்ததென் பேசுவனே.

(இ - ள்.) திருவம் பரவும் எழில் வில்லை வாழ்பவன்-இலக்குமியானவள் புகழுமழகையுடைய வில்லையென்னுந்தலத்தில் வாழுகின்ற சிவபெருமான், தீங்குறு சூர் கருவம் பரவுதலில்லாது அயில்விட்ட கந்தன தந்தை - கொடுமையையுடைய சூரபன்மனது சனனம் விரியாது வேலாயுதத்தைச் செலுத்தின குமாரக்கடவுளுக்குத் தகப்பன், மருவு பரவுதலில்லாத என்னை-பொருந்திய வணங்குதலில்லாத வடியேனை, வலிந்து தன்பொற் பெரு வம்பு அரவிந்தத்தாள் தொழவைத்தது என்பேசுவன் - தடுத்து தனது பொன்போன்ற மிகுந்த வாசனையையுடைய தாமரையாகிய திருவடியை வணங்கும்படி வைத்ததை யென்னசொல்லுவன், ஏ-அசை, அம்-சாரியை. (௬௨)

பேசிலருடருந் தில்லைகுடந்தை பிரமபுரங்
காசிநற்காளத்தி யண்ணாமலைதந்திக காக்கடவூர்
ஆசிலருங்கச்சி கூடன்மருதூ ரரசவனந்
தாசிமிருந்த கமலைவில்வைப்பரன் றானங்களே.

(இ-ள்.) வில்வை பரன் தானங்கள் - வில்வையென்னும் பதியி லெழுந்தருளிய சிவபெருமானது தலங்கள், பேசில் அருள் தரும் தில்லை குடந்தை பிரமபுரம் - சொல்லுமிடத்தில் கிருபைசெய்யுஞ் சிதம்பரம் குடமூக்கு சீர்காழி, காசி நல் காளத்தி அண்ணாமலை தந்திக்கா கடவூர் ஆசில் அரும் கச்சி கூடல் மருதூர் அரசவனம் தாசிமிருந்த கமலை-வாசு.

ஏந்திழையாளையோர் பாகத்தில்வைத்தவ னெண்ணுமன்
போந்திழையாயரு ளென்றவர்க்கீயும் புராரியமர் [பால்
சார்ந்திழையார்முற்ற மார்வில்வைநாதன்பின் சார்ந்திடுபெண்
காந்திழையாமற் சுரந்தண்மையாகுக கார்துளித்தே.

(இ-ள்.) ஏந்திழையாளை ஓர்பாகத்தில் வைத்தவன் எண்ணும் அன்பால் - தாங்கிய வாபரணத்தையணிந்த வுமாதேவியாரை யோர்பாகத்தில்வைத்த கடவுளானவரும் நினைக்கின்ற பத்தியினால், போந்து இழையா அருளென்றவர்க்கு ஈயும் புராரி அமர் - வந்து கிருபையைச் செய்வாயென்றவர்களுக் கருணைக்கொடுக்குந் திரிபுரதகனருமானவ ரெழுந்தருளிய, சார்ந்து இழை ஆர் முற்றமார் வில்வை நாதன்பின் சார்ந்திடுபெண் - சுண்ணச்சாந்துபூசியிருக்கின்ற வரிய வுபரிகைகளையுடைய வில்வேசன்பின்னால் சென்ற பெண்ணானவள், காந்து இழையாமல் சுரம் தண்மை ஆகுக கார்துளித்து - சுருவடைந் திளைக்காமல் பாலைநிலமானது மழைவருஷித்துக் குளிர்ச்சியாயிருக்க, ஏ-அசை. (சஅ)

காரானைத்தோலி னுரியானையன்பர் கருதுதில்லை
யூரானைத்தோய முறுசடையானை யொளிருகொன்றைத்
தாரானைத்தோத்திரத் துக்குவப்பானைச் சதுர்பெருகு [யே.
சீரானைத்தோரண வாய்வில்வையானைவைத் தேன்சிந்தை

(இ-ள்.) காரானை தோலின் உரியானை அன்பர் கருது தில்லையூரானை - கரியநிறமுள்ள யானையினது தோலைப்போர்த்தவனை அடியார்கள் தியானிக்குஞ் சிதாகாசத்தையுடையவனை, தோயமுறு சடையானை ஒளிரு கொன்றைத்தாரானை தோத்திரத்துக்கு உவப்பானை - கங்கைபொருந்திய சடாபாரத்தையுடையவனை விளங்குகின்ற கொன்றை மலர்மாலையையுடையவனை அடியார் துதிக்குச் சந்தோஷிக்கின்றவனை, சதுர்பெருகு சீரானை தோரணவாய் வில்வையானை சிந்தைவைத்தேன் - சதுர்மிகுந்த சிறப்பாகிய விடபவாகனத்தையுடையவனை தோரணங்கணிறைந்த வாயிலையுடைய வில்வைப்பதியையுடையவனை மனத்தி லெழுந்தருளப்பண்ணினேன், ஏ-அசை. (சகூ)

வைத்தவனங்க ணிறைவில்வைத்தேவனை வந்தித்தா
லைத்தவனந்தடைத் தன்னருளார்ந்திங்கு வாழ்வனசன்

வைத்தவனந்துடை யான்றொழுதேத்து வளத்தைநஞ்சி
வைத்தவனந்தலில் லாததிருவை மதித்தனமே.

(இ - ள்.) வைத்த வனங்கள் நிறை வில்வைத்தேவனை-தழையும்படி வைத்த நந்தவனங்க ணிறைந்திராநின்ற வில்வைப்பதியி லெழுந்தருளிய கடவுளை, வந்தித்து நவை தவனம் துடை தன்னருள் ஆர்ந்து இங்குவாழ்-வணங்கிக் குற்றமாகியவாசையைநீக்கு குளிர்ச்சிபொருந்தியவருளைப்பெற்றிவ்விடத்து வாழ்வாயாக, வனசன் வை தவ நந்துடையான் தொழுதேத்து வளத்தை - பிரமனும் பழிப்புகெடச் சங்கையுடைய திருமாலும் வணங்கித் துதிக்காநின்ற வளப்பத்தை, நல் சிவை தவம் நந்தலில்லாத திருவை மதித்தனம் - நல்ல வுமாதேவியாரது தவத்திற்குகந்து கெடுதலில்லாம விடப்பாகத்தில்வைத்த சிறப்பை மதித்தனம், ஏ - அசை. (௩௦)

திருவாதிரைத்தினமஞ்சனங்கொள்கின்றசெல்வன்வில்வை
மருவாதிரைக்கங்கை சூடும்பிரானடி வாழ்த்தவுடன்
கருவாதிரையறச் செய்திடுவான்கொடுங் காலனுயி [னே.
ரொருவாதிரையென் றொலிகழற்கால்கொண் டுதைத்தவ

(இ - ள்.) திருவாதிரைத்தினம் மஞ்சனங்கொள்கின்ற செல்வன்-திருவாதிரை நட்சத்திரநாளில் அபிஷேகங்கொள்ளுஞ் செல்வத்தையுடையவன், வில்வை மருவா திரை கங்கை சூடும் பிரான் அடி வாழ்த்த-வில்வைப்பதியில் பொருந்தி யலைகளையுடைய கங்கையைத் தரிக்கும் கடவுளது திருவடியைத் துதிக்க, உடன் கரு வாது இரை அறச்செய்திடுவான்-உடனே சனனமாகிற வாதினதிருப்பை நீங்கும்படி செய்வான், கொடும் காலன் உயிர் ஒருவாதிரையென்று ஒலி கழல் கால்கொண்டு உதைத்தவன்-கொடிய வியமன தான்மா நீங்கும்படி கடவென்றுசொல்லச் சத்திக்கும் வீரகண்டாமணியையுடைய திருவடியைக்கொண் டுதைத்தவன், ஏ-அசை. (௩௧)

வன்னஞ்சுகந்துண்ட மாவில்வைவாணற்கு மாதுதன
கன்னஞ்சுகளைபனி நீருகவாடிக் கலுழ்தொரிரா [வ்விராம்
பன்னஞ்சுகமென் றிருந்தனளென்றென்றன் பண்பையெ
உன்னஞ்சுகனியிப் போதேபறந்துசென் றோதுவையே.

(இ-ள்.) வன்னஞ்சு உகந்து உண்ட மா வில்லை வாண ற்கு - வலிமையுள்ளவிடத்தைச் சந்தோஷித்துப் பொசித்த பெருமைபொருந்திய வில்லையம்பதியில் வாழுங் கடவுளுக்கு, மாது தன் அகன் நஞ்சு கண்பனிநீருக வாடி கலுழ்ந்து ஓர் இரா - பெண்ணானவள் தனது மனதுவருந்தி கண்களிடத் திடைவிடாது நீரைச்சிந்தி வாட்டமுற்றழுதோரிரவானது, பன்னு அஞ்சு உகமென்று இருந்தனளென்று என்றன் பண்மை யெல்லாம்-சொல்லு மஞ்சுகமாயிருக்குதென்றிருந்தாளென்று எனது தன்மையையெல்லாம, உன்னு அஞ்சுகம் நீ இப்போதே பறந்துசென்றோதுவை-நினைககத்தக்க கிளிப்பிள்ளையே நீ யிககணமே பறந்துபோய் சொல்வாயாக, ஏ-அசை. (ருஉ)

பறந்திருக்குஞ்சடை யானையுமையவள் பாகத்தனைச்
சிறந்திருக்குமபுகழ்ச் செல்வனைவில்லையிற் சேர்பரனை
மறந்திருக்கும்பவ மாறத்துதிக்க வகையற்றந்தோ
திறந்திருக்கும்மட வார்ககழிவோரை யிகல்சித்தமே.

(இ-ள்.) பறந்திருக்கும் சடையானை உமையவள் பாகத்தனை - விளங்கியிருக்குஞ் சடையையுடையவனும் பார்வதிதேவியாரை யிடதுபாகத்தில் வைததவனும், சிறநது இருக்கும் புகழ் செல்வனை வில்லையில் சேர்பரனை - சிறப்புற்றிருக்கு மிருக்குவேதமுமம புகழப்பட்ட செல்வத்தையுடையவனும் வில்லையென்னும்பதியி லெழுந்தருளியிருக்கின்றவருமாகிய சிவபெருமானை, மறம் இருக்கு பவம் மாற துதிக்க வகையற்று அந்தோ - கொலையுமாறுபாடுஞ் சனனமு நீங்கும்படித் தோத்திரிக்க வகையில்லாமலையோ, திறம் இருககு மடவார்க்கு அழிவோரை சித்தமே இகல் - வலுமையாகிய தன்மையுடைய மடந்தர்களுக்காக மனமழிகின்றவர்களை மனமே பகைப்பாய். (ருங)

இகலற்றிடச்சித் தசன்பூசைசெய்வில்லை யீசனல்ல
பகலுற்றனையம்பு காலவரன்மன்றைக்கலக் கும்பரமன்
புகலுற்றுவேலொரு தேத்தொழுவார்பதம் புக்குவரோ
மிகவுற்றபேர் பிரயத்திலாழ்குவர் மெய்ம்மெய்ம்மையே.

(இ-ள்.) இகலற்றிடச்சித்தசன் பூசைசெய் வில்லை ஈசன் - பகைநீங்கும்படி மன்மதன் அர்ச்சித்த வில்லைப்பதியி லெ

ழுந்தருளிய கடவுளானவரும், நல்ல பகல் அல் தணல் அம்பு கால் வான் மண ஆ கலக்கும பரமன் - நல்லபகலு மிருளு மக்கி னியுஞ் சலமும காற்று மாகாயமும் பூமியுமாகக் கலந்திரா நின்றவருமாகிய சிவபெருமானை, புகலற்று வேறொரு தே தொழுதால் பதம் புக்குவரோ - அடைக்கலம புகாமல் வேறே யொருதெய்வத்தை வணங்கினால் பதவியிற் சேர்வார்க ளோ, மிகு அலல் தடுக்க நிரயத்தில் ஆழ்குவர் மெய்ம்மெய் மை - மிகுந்த துன்பந்தடுத்துநிற்க நரகத்திலமிழ்வார்களுண் மை யுண்மை, ஏ - அசை. (௫௪)

மெய்யைச்சதமென வெண்ணிப்பலபொருள் வேர்வைமிக
மெய்யைச்சதம்பொய்மை யென்றுரைத்தீட்டிவிலைமடவார்
மெய்யைச்சதமென் றெணிக்கெடுவாரவில்லை மேயவனே
மெய்யைச்சதமுயா வொன்றறியாதம் விதியிதுவே.

(இ-ள்.) மெய்யை சதமென எண்ணி பலபொருள் வேர்வை மிக - தேகத்தை நிலையென்றுநினைத் தநேக திரவ யங்களை வியர்வையான ததிகரிக்க, மெய்யை சதம் பொய் மை என்று உரைத்து ஈட்டி விலைமடவார் - உண்மையை யெல்லாம் பொய்யென்றுசொல்லிச் சம்பாதித்துப் பரத் தையரது, மெய்யை சதமென்று எணி கெடுவார் வில்லை மேயவனே - சொல்லை யுறுதியென்று நினைத்துக் கெட்டுப் போவார்கள் வில்லைப்பதியி லெழுந்தருளிய சிவபெருமா னே, மெய் ஐச்சு அதம் உயர்வு ஒன்று அறியார்தம் விதி இதுவே - மெய்யெழுத்து உயிரெழுத்து இழிவு மேம்பாடு ஆகிய விவைகளிலொன்று மறியாதவருடைய முறைமை யிவ்வளவேயாம். (௫௫)

விதிக்குமரிக்குமெட் டாப்பரன்சொல்லருமெய்யன்பர்செய்
துதிக்குமரிக்கும் வினையேன்பனுவற்குஞ் சொல்லியுடன்
கதிக்குமரிக்கு முமையாட்குமன்புற நற்கதியை
விதிக்குமரிக்குலஞ் சேர்பொழில்சூழ்வில்லை வித்தகனே.

(இ-ள்.) விதிக்கும் அரிக்கும் எட்டா பரன் சொல்லரு மெய்யன்பர் செய் - பிரமனுக்குந் திருமாலுக்கு [illegible] டாத சிவபெருமான் சொல்லுதற்கரிதான வுண்மை [illegible] வடியர்கள் செய்கிற, துதிக்கும் அரிக்கும் வினையேன் பனு வற்கும் சொல்லி - தோத்திரத்துக்கும் கெடுக்காநின்ற வினை

யையுடைய வடியேன்செய்த பாமாலைக்கும் புகழ்ந்து, உடன் நதிக்குமரிக்கும் உமையாட்கும் அன்புற நல் கதியை- உடனே கங்காதேவியாருக்கும் பார்வதிதேவியாருக்கு முவகையுண்டாக நல்ல பதவியை, விதிக்கும் ஆரிக்குலம் சோலை பொழில் சூழ் வில்வை வித்தகன்-வண்டுக்கூட்டங்கள்பொருந்திய சோலைகள்சூழ்ந்த வில்வையம்பதியி லெழுந்தருளிய கடவுள் நிச்சயிக்கும், ஏ-அசை. (௯௬)

வித்தந்தியானமன் பர்க்கருள்வோனெழில் வில்வையனைங்
கைத்தந்தியான்றந்தை சுந்தரனேத்திடக் கார்குழலில்
அத்தந்தியான விருள்சென்றதன்பொன் னடிமலரன்
பைத்தந்தியானு முயச்செய்வன்வேதப் பரம்பொருளே.

(இ-ள்.) வித்தர் தியானம் அன்பர்க்கு அருள்வோன் எழில் வில்வையன் - ஞானமுஞ் சிந்தனையு மடியார்களுக்குக் கிருபைசெய்கின்றவரும் அழகுபொருந்திய வில்வைப் பதியையுடையவருமாகிய கடவுள், ஐங்கை தந்தியான் தந்தை சுந்தரன் ஏத்திட கார்குழல் இல்-ஐந்துகைகளையுடைய யானைமுகக்கடவுளுக்குப் பிதாவானவரும் சுந்தரமூர்த்தி நாயனார் துதிசெய்ய கரிய கூந்தலையுடைய பரவையாரது வீட்டிற்கு, தியான அத்த விருள் சென்ற தன்பொன் அடிமலர்-கொடுமையுள்ள பாதிராத்திரியிற் றூதாகச்சென்ற தனது பொன்போன்ற பாதமலரிடத்து வைகரும், அன்பை தந்து இயானும் உயச்செய்வன் வேதப்பரம்பொருள் - பத்தியைக் கொடுத்து அடியேனுங் கடைத்தேறச்செய்வான் மேலாகிய பரம்பொருளாகவு முள்ளவன், ஏ - அசை. (௯௭)

வேதனையேதர வென்றனைச்சூழ விரும்புமுன்றன்
காதலையேதர மொன்றறியாவினை யேகயவோர்
நீதனையேதர மாக்காவெனவயன் செப்புமவில்லை
நாதனையேதரப் பூச்சார்த்திநின்று நவின்றனனே,

(இ-ன்.) ஏ தரமொன்று அறியாவினையே - நீராதரமறியாத தீவினையே, வேதனையே தர என்றனைச்சூழ விரும்பும் உ[illegible]றன் காதல் ஐ-துன்பத்தையேகொடுக்க வென்னைச் சூழ்ந்துகொள்ள விச்சிக்கு முன்னுடைய வாசையை யொழித்துவிடு, கயவோர் நீ-கீழ்மக்களைக்கொளுதது, தனையே தரமாகாவென அயன் செப்பும் - தன்னையே கிரம

யாக விரட்சிப்பாயென்று பிரமன் சொல்லித்துதிக்கும், யில்லை ராதனையே தரு அ பூச்சாததினின்று நவின்றனன்-வில்லை பதியி லெழுந்தருளிய சிவபெருமானையே மரத்தில்நூக்கு மாதமலர்களா லருச்சித்து நிலையாக நின்று துதித்தவன், ஏ - அசை. (௫௮)

நின்றவனங்கி மலையுருவாய்நெடு நாளளவுஞ்
சென்றவனங்கிரு நற்பரிகொண்டுமுன் றென்னனுழை
ஒன்றவனங்கிழித் தோடுஞ்செய்சூழ்வில்லை யோங்குமெம்
மன்றவனங்கிளர் தாள்பாடச்சென்ம வழக்கறுமே. [மான்

(இ - ள்.) அங்கிமலையுருவாய் நெடுநாளளவும் நின்றவன்-அக்கினிமலை வடிவாக வநேககாலம்வரையில் நிலையாக நின்றவன், அங்கு இரு நற்பரி கொண்டு முன் தென்னனுழை சென்றவன்-அவ்விடத்துப் பெருமைபொருந்திய நல்ல குதிரைகளை நடத்திக்கொண்டு முற்காலத்திற் பாண்டியனிடத்திற் போனவன், ஒன்ற வனம் கிழித்து ஓடும் செய் சூழ் வில்லை ஓங்கும் எம்மான் - பொருந்திய சலமானது கிழித் தோடுகின்ற வயல்நிலங்கள் சூழும் வில்லைப்பதியி லெழுந்தருளிய வெமது கடவுளது, மன்ற வனங்கிளர் தாள் பாட சென்ம வழக்கறும் - மிகவு மழகுவிளங்காநின்ற திருவடிகளைத் துதிக்கப் பிறப்பாகிற வழக்கு நீங்கும், ஏ-அசை.

அறுகாறுதிங்க ளணிந்தவன்வில்லை யரனடியை
அறுகாறுதிகழு நாய்க்கிளையாகின்ற வாகத்திச்சை
அறுகாறுசன னக்கடறுண்டி யறைவரிய
அறுகாறுதிண்பொழில் சூழ்கயிலைக்கதி யண்ணுவையே.

(இ-ள்.) அறுகு ஆறு திங்கள் அணிந்தவன் வில்லை அரன் அடியை - அறுகையும் ஆற்றையுஞ் சந்திரனையுந் தரித்த கடவுளும் வில்லைப்பதியி லெழுந்தருளியிருக்காநின்றவருமாகிய சிவபெருமானுடைய பாதத்தை, அறுகால் துதி கழுநாய்க்கு இளையாகின்ற ஆகத்து இச்சை அறு காறுதி-ஆறுகாலமுந் துதிப்பாய் கழுகுக்கும் நாய்க்கு மிரையாகின்ற தேகத்தினாசையை யகற்று காறியுமி, சனனக்க[illegible] தாண்டி அறைவரிய அறுகால் து திண்பொழில் சூழ் கயிலைக் கதி அண்ணுவை-சனனசாகரத்தை நீங்கி சொல்லற்கரிய

கசபையில் நிருத்தம்புரிந்த கடவுளே, நல் அணி வேங்கை சூழ் வில்லை வாழ்பர - நல்ல வழகாக வேங்கைமரங்கள் சூழுகின்ற வில்லைப்பதியில் வாழுஞ் சிவபெருமானே, ஐம்பொறியால் அழிந்து இணி வேம் கையன்றனை முன் காரும் புட்கு அருள்செய்ததுபோல்-பஞ்சேந்திரியங்களினால் கெட்டுப பலத்தோடுவேகும வஞ்சகனை முற்காலத்தில் கரிக்குருவிக்குக கிருபைபுரிந்ததுபோல, தணிவு ஏங்கைநீங்க அளித்திடுவாய் எந்தயாநிதியே - தணிவாக ஏக்கம்நீங்கக் காப்பாற்றுவா யெங்கள் தயாளமுள்ள திரவியமே. (சுஎ)

நிதியேகதிதரு நின்மலனேபழி நேரத்தென்னன்
றதியேகதிக்கவந் தாள்சுயம்பேதொண்டர் சூழும்வில்லைப்
பதியேகதிக ழுமையாள்தலைவ பரதவிக்க
விதியேகதியென் றுனைத்தொழுவேற்கும் விளம்புவையே.

(இ - ள்.) நிதியே கதி தரும் நின்மலனே - திரவியமே மோக்ஷத்தைக்கொடுக்கும பரிசுத்தவானே, பழி நேர தென்னன் துதியே கதிக்க வந்து ஆள் சுயம்பே - பழிசம்பவிக்கப் பாண்டியன் செய்யுந் தோத்திரமானது சிறக்க வெழுந்தருளிவந்து கிருபைசெய் திரக்ஷிக்குஞ் சுயம்புவானவனே, தொண்டர் சூழும் வில்லைப்பதி ஏக திகழ் உமையாள் தலைவ - அடியார்கள் சூழுகின்ற வில்லைப்பதியி லெழுந்தருளிய வொப்பற்றவனே விளங்காநின்ற பார்வதி தேவியாருக்கு நாயகனே, பரதவிக்க கதியென்று உனை தொழுவேற்கும் விதியே விளம்புவை-வருந்த வடைக்கலமென்று தேவரீரை வணங்குகின்ற வடியேனுக்கு மூழ்வினைவந்தணுகுமா விதைச் சொல்வாயாக, ஏ - அசை. (சுஅ)

விளக்கடுக்கைக்கங்கைசூடும்பிரான்வில்லைமேவுபெம்மான்
வளக்கடுக்கண்டன் மலைமங்கைபாகன் மலரடியை
யுளக்கடுப்பாறத் துதித்திலிர்தாயி னுதாந்தனி
லளக்கடுப்பார்மெய்யை வைத்திருமந்தகனுண்டிட்டவே.

(இ-ள்.) விளம் தடுக்கை கங்கை சூடும் பிரான் வில்லை மேவு பெம்மான்-விளவுங் கொன்றையுங் கங்கையுஞ் சடாபாரத்தில் தரிக்குங் கடவுளும் வில்லைப்பதியி லெழுந்தருளிய பரமனும், வளம் கடுக் கண்டன் மலைமங்கை பாகன்

மலரடியை-வளமையாகிய சமுத்திரத்திலுண்டான விஷத்தைக் கண்டத்தில் வைத்தவரு முமாதேவியாருக் கிடப்பாகத்தைக் கொடுத்தவருமாகிய சிவபெருமானது மலர்போன்ற பாதத்தை, உளம கடுப்பு ஆற துதித்திலிர - மனத்திற் பொருந்திய வருத்தந்தணிய துதிக்கமாட்டாதவர்களே நீங்கள், தாயின் உதரந்தனில் அளம் கடுப்பார மெய்யை அந்தகன் ஆண்டிட வைத்திரும-தாய்வயற்றில் நெருங்கிய சொலிக்கின்றமெய்யை யியமனாளும்படி வைத்திருங்கள், எ-அசை. (௬௯)

அந்தகனஞ்ச வுதைத்தவவில்லை யரதிரையார்
அந்தகனஞ்சங் குடித்திச்சுரரை யளித்தவனே
அந்தகனஞ்சங் குனக்களித்தேனினி யாரணனால்
அந்தகனஞ்சட லஞ்சிட்டியாதெற் கருளுவையே.

(இ-ள்.) அந்தகன் அஞ்ச உதைத்தவ வில்லை அர-இயமன் பயப்படும்படி யுதைத்தவனே வில்லைப்பதியி லெழுந்தருளிய சிவபெருமானே, திரையார் அந்த கல் நஞ்சங்குடித்து சுரரை அளித்தவ-சமுத்திரத்தில் அந்த கல்லென்றசத்தத்தோடுவந்தவிடத்தையுண்டு தேவர்களை யிரக்ஷித்தவனே, நேயந்தக நஞ்சு உனக்கு அளித்தேன் இனி ஆரணனால்-அன்பைத் தகுதியாகவருந்தித் தேவரீருக்குக் கொடுத்தேனினிமேல் பிரமனால், அந்தம் கனம் சடலம் சிட்டியாது எற்கருளுவை - அழகிய கனத்ததேகத்தைப் படைக்காமலிருக்கும்படி யடியேனுக்குக் கிருபைசெய்வாய், எ-அசை. (௭௰)

அண்டங்கடாவுஞ் சிகிரிகளோங்கி யணிசெய்வில்லைக்
கண்டங்கடாருங் கடவுளைப்போற்றிக்கன் மந்தொலைத்தால்
தண்டங்கடாத்திரி சூலத்துடன்வருஞ் சண்டனுயிர்
கொண்டங்கடாது வதைபுரியான்புகழ் கூடிடுமே.

(இ-ள்.) அண்டங்கள் தாவும் சிகிரிகள் ஓங்கி அணிசெய் வில்லை - அண்டங்களை யளாவுகின்ற கோபுரங்களோங்கி யழகைச்செய்கின்ற வில்லைப்பதியி லெழுந்தருளிய, கண்டம் கடு ஆரும் கடவுளை போற்றி கன்மம் தொலைத்தால் - கழுத்தில் விடம்பொருந்திய சிவபெருமானைத் துதித்துப் பூர்வகன்மத்தை நீக்கினால், தண்டம் கடா திரிசூலத்து உடன்

வரு சண்டன் - கதை எருமைக்கடா திரிசூலம் இவைகளுடன் வராநின்ற வியமன், உயிர் கொண்டு அங்கு அடாத வதை புரியான் புகழ் கூடுமே - ஆன்மாவைப் பிடித்துக் கொண்டுபோ யவ்விடத்துச் செய்யத்தகாத வதையைச் செய்யமாட்டான் கீர்த்தியுண்டாகும், ஏ-அசை. (௭௧)

புண்ணியகண்ணிரு நான்குடையோனரி போகிவிண்ணோர்
நண்ணியகண்ட பரிபூரணனென நாத்தழும்ப
வெண்ணியகத்தில்வைத் தேத்திடுநாத வெழில்செய்வில்வை
யண்ணியகங்கா தரநின்சரணுக் கடைக்கலமே.

(இ-ள்.) புண்ணிய கண்ணிருநான்குடையோன் அரி போகி விண்ணோர் - புண்ணியனே யெட்டுக்கண்களையுடைய பிரமனுந் திருமாலு மிந்திரனுந் தேவர்களும, நண்ணி அகண்ட பரிபூரணனென நாத்தழும்ப - பொருந்தி யெங்குநிறைந்த பரிபூரணனேயென்று நாவானது தழும்பேற, எண்ணி அகத்தில் வைத்து ஏத்திடும் நாத - நினைத்து நெஞ்சத்திருத்தித் துதிக்குநாதனே, எழில்செய் வில்வை அண்ணிய கங்காதர நின்சரணுக்கு அடைக்கலம் - அழகுபொருந்திய வில்வைப்பதியி லெழுந்தருளிய கங்காதரனே நின்றிருவடிக ளடைக்கலம், ஏ-அசை. (௭௨)

அடைக்கலந்தாவெனத் தொண்டர்களேத்துறு மண்ணல்வி
நடைக்கலந்தாவலொடுகற்குமன்னமுநாளுமின்னே [ல்வை
தொடைக்கலந்தானசையாதணையேமதன் சோபமுற்றுக்
கிடைக்கலந்தாதைந்து பாணந்தொடுத்தனன் கேள்வியற்றே.

(இ-ள்.) அடைக்கலம் தாவென தொண்டர்கள் ஏத்துறும் அண்ணல் வில்லை - புகலிடங் கொடுவென்றடியார் கடுதிககாநின்ற சிவபெருமானெழுந்தருளிய வில்வைப்பதியிலிராநின்ற, நடை கலந்து ஆவலொடு கற்கும் அன்னமும் நாளும் மின்னே - நடையைச்சேர்ந்தாசையோடு கற்றுக்கொள்ளாநின்ற வன்னப்பறவையும் வெட்கமடையும்படியான பெண்ணே, தொடைக்கலம அசையாது அணையேம் மதன் சோபமுற்று - ஆபரணங்க ளசையாமல் சேரவில்லை மன்மதன் சோபங்கொண்டு, கிடைக்கு அலந்தார்து கேள்வியற்று ஐந்து பாணமும் தொடுத்தனன் - கிடைத்தற்குவருந்தாது கேள்வி

யில்லாமல் பஞ்சபாணங்களையுந் தொடுத்தனன், தான், ஏ - அசை. (௭௩)

அற்றந்தருதவி லந்தணர்கூடி யருமறைகள்
கற்றந்தருப்பை முதற்கொண்டுவேள்வி களிப்புறவே
சுற்றந்தரும மிகச்செய்யும்வில்லைச் சுரவெனைநோய்
குற்றந்தருமனைப் போல்வாட்டுதின்னருள் கூர்வித்தனே.

(இ-ள்.) அற்றந்தருதலில் அந்தணர் கூடி அருமறைகள்-சோர்வில்லாத வேதியர்கள் ஒன்றாகச்சேர்ந்தருமையாகிய வேதங்களை, கற்று அம் தருப்பைமுதற்கொண்டு வேள்வி களிப்புற-வாசித்தழகிய தருப்பை முதலியவையுங்கொண்டு யாகத்தைச் சந்தோஷமாக, சுற்றம் தருமம் மிக செய்யும் வில்லை சுர-பந்துக்களுந்தருமமுமதிகரிக்கச்செய்கின்றவில்வைப்பதியிலெழுந்தருளிய சிவபெருமானே, எனை நோய் குற்றம்தருமனைப்போல் வாட்டுது இன்னருள் வித்தனே கூர்-அடியேனை வியாதியானது தீவினையாகிய குற்றத்துக்காக யமனைப்போல் வருத்துது ஞானசொரூபியே அதுநீங்கும்படியாகவினியகிருபையைச் செய்வாயாக, ஏ - அசை. (௭௪)

வித்தகமத்தக மார்விழியாவில்லை விண்ணவபா
வித்தகமத்த கரியுரியாயென மெய்யன்பர்கூ
வித்தகமத்த மலர்சாத்திடும்பர வீண்மதன்செர்
வித்தகமத்த மனையேவிலென்செயு மெல்லியளே.

(இ-ள்.) வித்தக மத்தகமார் விழியா வில்லை விண்ணவ-ஞானசொரூபியே நெற்றிக்கண்ணையுடையவனே வில்வைப்பதியி லெழுந்தருளிய கடவுளே, அகம் பாவித்து மத்தகரியுரியாயென மெய்யன்பர் கூவி - மனதில் பாவனைசெய்து மதயானையின் றோலையுடையவனேயென் றுண்மையானவடியார்கள்துதித்து, தக மத்தமலர் சாத்திடும் பர - தகுதியாக வூமத்தமலரா லர்ச்சிக்கப்பட்ட பரனே, வீண்மதன் செர்வித்து அகமத்தம் மனை எவில் மெல்லியள் என்செயும்-வீணனமாரனகங்கரித்துக் குடங்கையிலிராநின்ற தாமரைமலர்ப்பாணத்தையேவிடில் பெண்ணுனவ ளென்னசெய்வாள், ஏ-அசை. (௭௫)

மெல்லியலாகு முமைபங்கவில்வையின் மேவுமைய
சொல்லியலாசகங்க நின்றவதென்னன் றுதிக்குகந்து
மலலியலார்கரி வென்றவவிம்மை மறுமையினு
நல்லியலானெனச் சொல்லச்சுகமரு ளுநாயகனே.

(இ-ள்.) மெல்லியலாகும் உமை பங்க வில்வையில் மேவும் ஐய-பெண்ணுகின்ற வுமாதேவியாரைப் பாகத்தி லுடையவனே வில்வைப்பதியி லெழுந்தருளியகடவுளே, சொல்லியல் ஆர் சங்கம் நின்றவ தென்னன் துதிக்கு உகந்து - புகழாநின்ற விலக்கணம்பொருந்திய சங்கததிலிருந்தவனே பாண்டியனது தோத்திரத்துக்குச் சந்தோஷித்து, மல் இயலார் கரி வென்றவ இம்மை மறுமையிலும்-வலுமையையுடைய நடைபொருந்திய யானையைச் செயித்தவனே யிப்பிறப்பிலும் மறுபிறப்பிலும், நல்லியலானென சொல்ல சுகம் அருள் நாயகனே - நல்ல குணமுடையவனென்று சொல்லுமபடியான சுகத்தைக் கிருபைசெய்வாய் கடவுளே, ஏ-அசை. (௭௬)

நாயகராமெனச் சிற்சிலதேவரை நாடித்தர்க்கம்
தீயகராகச்செய் பேதைகளேமுனஞ் சீறிநஞ்சு
பாயகராசலம் போல்வரவெம்மான் பருகிலனேல்
மாயகராவ ரறிவிர்வில்வையனை வந்தியுமே.

(இ-ள்.) நாயகராமென சிற்சிலதேவரை நாடி தர்க்கம்-தலைவர்களென்று சிலசிலதேவர்களைச்சேர்ந்து வாதம், தீய கராக செய் பேதைகளே முனம் நஞ்சு சீறி-கொடிய மனமுடையவராகச்செய்கின்ற வறிவீனர்களே முற்காலத்தில் விஷமான தெதிர்த்து, பாய் அகராசலம்போல் வர எம்மான் பருகிலனேல் - பரவியந்த யானையைப்போலவா வெமது சிவபெருமான் பொசிக்காவிட்டால், மாய் அகராவர் அறிவீர்-அத்தேவர்களிறக்குந் தேகமுடையவர்களாவதை யறிவீர்கள் ஆதலால், வில்வையனை வந்தியும்-வில்வைப்பதியிலெழுந்தருளியிருக்குஞ் சிவபெருமானை வணங்குவீர்களாக, ஏ-அசை. (௭௭)

வம்பணிகொங்கைத் திருநாயகனை மலரயனை
அம்பணிகொங்கை யலர்சூடியதனை தாகம்வைத்தோன்
செம்பணிகொங்கைப் பொழில்வில்வைநாதன் றிருவடியை
நம்பணிகொங்கையர் பெற்றதுபோலரு ணண்ணுவையே.

(இ-ள்.) வம்பு அணி கொங்கை திரு நாயகனை மலரயனை-இரவிக்கையைத் தரிகரும் தனங்களையுடைய விலக்ஷுமிக்கு மணாளனாகிய திருமாலையும் பிரமனையும், அம் பணி கொங்கு ஐ அலர் சூடிய தனது ஆகம் வைத்தோன்-கங்கையையுஞ் சர்ப்பத்தையும் வாசனைபொருந்திய வழகிய கொன்றைமலரையும் தரித்ததனதுதேகத்திவைத்தவன், செம பண் ஈ கொங்குப்பொழில் வில்லை நாதன் திருவடியை நம்பு-செவ்விதாகிய ராகத்தைப் பாடுகின்றவண்டுகள் பொருந்திய கொங்குமலர்ச்சோலைகளையுடைய வில்லைப் பதியிலெழுந்தருளிய சிவபெருமானது திருவடியை நம்புவாயாக, அணி கொங்கு ஐயர் பெற்றதுபோல் அருள் நண்ணுவை-அழகிய கொங்குநாட்டரசனாகிய சேரமான்பெருமாள் அடைந்தது போலக் கிருபையைப்பெறுவாய், ஏ-அசை. (எஅ)

அருமாதவஞ்செறி ஞானிகளென்று மமரும்வில்லைப்
பெருமாதவஞ்செழுந் தீக்களித்தோன்செயமபெற்றிடவான்
வருமாதவஞ்செகந் தோற்றுனையங்கத்தில் வைத்தவநீ
தருமாதவஞ்செய வொட்டாதளிப்பைகன் டாளளித்தே.

(இ-ள்,) அரு மா தவஞ் செறி ஞானிகள் என்றும் அமரும் வில்லை பெருமா-அருமையாகிய மிகுந்த தவம்பொருந்திய ஞானவான்கள் சதாகாலமு மமர்ந்திருக்கின்ற வில்லைப்பதியிலெழுந்தருளிய தலைவனே, தவம் செழும் தீக்கு அளித்தோன் செயம்பெற்றிட வான்-காண்டாவனத்தைச் செழுமையாகிய வக்கினிபகவானுக்குக் கொடுத்தவனாகிய வர்ச்சுனன் வெற்றிகொள்ள வாகாயத்தில், வரும் ஆதவம் செகம் தோற்றுனை அங்கத்தில் வைத்தவ-உதிக்குஞ் சூரியகிரணம் பூமியில் தோற்றாதிருக்கச்செய்த திருமாலைத் தேகத்தில்வைத்த சிவபெருமானே, நீதரு மாது அவஞ்செய ஒட்டாது கண்ணளித்து அளிப்பை-கொடுமைசெய்யு மூதேவியானவள் கெடுதிசெய்யாதிருக்கும்படிக்குக் கிருபாநோக்கஞ்செய்து அடியேனையிரட்சிப்பாயாக,தான், ஏ-அசை.

கண்டுகைத்திட்டாற் சொல்லிக்கிடந்தந்த கர்த்தன்வில்லை
கண்டுகைத்தட்டி யிருக்கின்றவள்ளல் கழல்களிற்றன் [க்
கண்டுகைத்தில்லா தெடுத்தருச்சித்திட்ட கண்ணற்குக்கைக
கண்டுகைத்திண்டிரு லூழித்தானைக் கருதுமினே.

(இ-ள்.) கண்டு கைத்திட்ட நல் சொல்லிக்கு இடம் தந்த கர்த்தன் - கற்கண்டுங் கசந்த நல்ல சொல்லையுடைய வுமாதேவியாருக் கிடப்பாகத்தைககொடுத்த கடவுள், வில்லை கண்டு கைதட்டி இருக்கின்ற வள்ளல் கழல்களில் - வில்வைப்பதியைப்பார்த்துக் கையைக்கொட்டி யெழுந்தருளியிருக்குஞ் சிவபெருமானது திருவடிகளில், தன் கண் துலைகத்தில்லாது எடுத்து அருச்சித்திட்ட கண்ணனற்கு-தனதுவிழிகளை வருத்தமில்லாதிடந்து பூசைசெய்த திருமாலுக்கு, கைகண் துலைகை திண் திரு ஆழி தந்தானை கருதுமின் - கையினிடத்துப்பொருந்தவுடனே பலமபொருந்திய சிறந்த சக்கரத்தைககொடுத்தவனை நினையுங்கள், ஏ - அசை. (௮௦)

கருவாயசங்கு பெறுமுத்தநாரை கருவெனவே
மருவாயசம்பெற வேயடைகாக்கும வயலவில்லைமூ
வுருவாயசம்புனைந் தேவீற்றிருநகநல் லுத்தமனே [யே.
திருவாயசம்பத் துறசெய்துனன்பாக்குள் சேர்விப்பை

(இ-ள்.) கரு வாய் அ சங்கு பெறும முத்தம் நாரை கருவெனவே - சூல்வாய்ந்தவந்த சஙகுகளானவையீன்ற முத்துக்களை நாரைகள் முட்டைகளெனவே, மருவு ஆயசம் பெறவே அடை காக்கும் வயல் வில்லை - பொருந்தியிளைப் புண்டாகவே யடைகாக்கின்ற வயல் நிலங்கள் சூழ்ந்த வில்வைப்பதியில், மூவுருவாய் அசம்புனைந்தே வீற்றிருக்கும் நல் உத்தமனே - திரிமூர்த்திவடிவாகி சந்தனபிடேகஞ் செய்துக்கொண்டே யெழுந்தருளியிருக்கும் நல்ல வுத்தம குணமுடையவனே, திருவாய சம்பத்துற செய்து உன்னன்பர்கருள் சேர்விப்பை - திருவாகிய செல்வமடையச் செய்தடியேனை யுன்னடியவர்களுக்குள் சேர்த்துக்கொள், ஏ-அசை. (௮௧)

சேருந்தரும குணபாலன் பூசனை செய்தவில்லை
யாருந்தரும வடிவாகியபர னன்பர்கட்குச்
சீருந்தருமலி யூருந்தருபவன் சீர்புகன்றுற்
பேருந்தரும னயன்வேலைதீரப் பிறப்பிவனே,

(இ-ள்.) சேரும் தருமகுணபாலன் பூசனை செய்தவில்லை-வந்துசேர்ந்த தருமகுணபாலனென்பவன் பூசைசெய்தவில்லைப்பதியில், ஆரும் தருமவடிவாகிய பரன்-எழுந்தரு

ளிய தருமசொரூபியாகிய கடவுள், அன்பர்கட்கு சேரும் தரு
மலினரும் தருபவன் சீர் புகன்றால் - அடியார்களுக்குச்
சேரும் விருக்ஷங்களிலைறந்த நகருநகொடுக்கின்ற சிவபெரு
மானது சீரைச்சொன்னால், பேரும் தருமன் அயன் வேலை
தீர பிறப்பு இவனே-இயமன் பிரமனிவர்களுக்குச் சிருட்டி
ப்புப் பட்சிப்பாகிய வேலையில்லாமல் சனன மிப்போதே
நீங்கும். (அஉ)

வண்ணப்பசுங்கிளி மென்மொழியாளொடும் வந்தடியேன்
எண்ணப்பயன்படு காட்சிதந்தாளெழி லீசமுனங்
கண்ணப்பருக்கரு டந்தவவாரூ ரெனக்களித்து [னே.
மண்ணப்பரும்புற் றிடங்கொண்டுவாழ்வில்லை வானவ

(இ-ள்.) வண்ணம் பசும் கிளி மென்மொழியாளொடும் வந்து - வளப்பமாகிய பசுமைபொருந்திய கிளியையொத்த மிருதுவாகிய சொல்லையுடைய பார்வதிதேவியாரோடு மெழுந்தருளிவந்து, அடியேன் எண்ணம் பயன்படு காட்சிதந்தாள்-அடியேனுடைய கருத்தாகிய பிரயோசனப்படுங்காட்சி கொடுத்தாள்வாய், எழில் ஈச முனம் கண்ணப்பருக்கு அருள்தந்தவ-அழகியவீசனே முற்காலத்தில் கண்ணப்ப நாயனுருக்குக்கிருபையைக்கொடுத்தவனே, ஆரூரென களித்து மண் அப்பு அரும் புற்றிடங்கொண்டு வாழ் வில்லை வானவனே-திருவாரூரைப்போல வுவகைகொண்டு மண்ணுலப் பியவருமையான புற்றிடமாக விருந்துவாழுகின்ற வில்லைப்பதியையுடைய சிவபெருமானே. (அங)

வில்லையந்தாதி யெனுமாலைசாத்தினன் மென்பதத்தில்
நல்லையந்தாதிக ழும்மலரோய்மறை நண்ணுபொருள்
சொல்லையந்தாதி யெனக்கேட்டவல்ல சுதனைத்தந்தோய்
பல்லையந்தாதிற் றிகழ்வில்லைமேய பரமகொள்ளே.

(இ-ள்.) வில்லையந்தாதியெனும் மாலைசாத்தினன் மென்பதத்தில் - வில்லையந்தாதியென்றுசொல்லும் பாமாலையைமிருதுவாகிய திருவடியிலணிந்தேன், நல்லையம் தாதிகழும் மலரோய்-நல்ல வுலகத்தைச் சிருட்டித்துவிளங்கும் பிரமனே, மறை நண்ணு பொருள் அந்தாதி சொல்லையென கேட்டவல்ல சுதனை தந்தோய் - வேதமுதலாகிய பிரணவத்தில் பொருந்திய வர்த்தத்தை யாதியோடந்த

மாகச் சொல்வாயென்று வினவின வல்லமைபொருந்திய புத்திரனாகிய முருகக்கடவுளை யீன்றவனே, பல்வையம் தாதில் திகழ் வில்லை மேய பரம கொள் - அநேகரதங்கள் பொன்போலப் பிரகாசிக்கின்ற வில்லைப்பதியி லெழுந்தருளிய சிவபெருமானே யங்கீகரித்துக்கொள், எ-அசை. (அச)

கொள்ளிடஞ்சூழும் புகலியர்கோன்கவி கூறவருள்
கொள்ளிடஞ்சேருமை யாடனப்பால்கொடுத்தோய்முதிரை
கொள்ளிடஞ்சால்வளப்புன்செயுநன்செயுங் கூடும்வில்லை
கொள்ளிடஞ்சீலநம் பாவென்னையாளக் குறிப்பையின்றே.

(இ-ள்.) கொள்ளிடம் சூழும் புகலியர்கோன் கவி கூற - கொள்ளிடநதியானது சூழுகின்ற சீர்காழியின் கண்ணவதரித்த சம்பந்தசுவாமிகள் திருமுறையாகிய தேவாரப்பதிகங்கள்பாட, அருள்கொள் இடஞ்சேர் உமையாள் தனப்பால் கொடுத்தோய்-அருளே வடிவமாகக்கொண்ட விடதுபாகத்திலிராநின்ற பார்வதிதேவியாரது திருமுலைப்பாலைக் கொடுக்கச் செய்தவனே, முதிரை கொள் இடு அம் சால் வளம் புன்செயும் நன்செயும் கூடும்வில்லை - துவரையுங் கொள் முதலியதானியங்களும் விதைக்கத்தக்க வழகிய வளப்பமிகுந்த புன்செய் நிலங்களும் நன்செய் நிலங்களுஞ் சூழுகின்ற வில்லைப்பதியை, கொள் இடம் சீலநம்பா இன்றே என்னையாள குறிப்பை - இடமாகக்கொண்டருளிய சீலனாகிய நம்பனே யிப்போதே யடியேனை யாட்கொள்ளக் கிருபாநோக்கம் வைப்பாய். (அரு)

குறித்தநற்றென்னவ னுக்கூடறன்னிற்செங் கோற்செலுத்
[தித்
தெறித்தநற்கைதடிந் திட்டவன்வாழ்வில்லை சேருநம்ப
வெறித்தநத்தம்புரி வேனுக்குமையல்செய் மெல்லியலி
னெறித்தநங்கண்ட வுடன்மனங்கண்டில னின்றனனே.

(இ-ள்.) குறித்த நல் தென்னவனு கூடல் தன்னில் செங்கோல் செலுத்தி-நிச்சயித்த நல்ல பாண்டியனாக மதுரையிலரசாக்ஷிசெய்து, தெறித்து அனல் கை தடிந்திட்டவன் வாழ் வில்லை சேருநம்ப - பாய்ந்து அக்கினிபகவானுடையகையை வெட்டினவனாகிய சிவபெருமான் வாழுகின்ற வில்லைப்பதியிற் சேர்ந்திராநின்ற நேயனே, வெறித்து

சிவசங்கராவரு ளென்றன்பரேத்த றிகழ்வில்லைசேர்
பவசங்கராரெழிற் கூடற்றலைவ பழவினையால்
அவசங்கராப்பற்று குஞ்சரம்போற்கொண் டலைந்தனின்ப
தவசங்கரானைதந் தோயருள்வாய்நின் றனிக்கதியே.

(இ-ள்.) சிவசங்கரா அருளென்று அன்பர் ஏத்தல் திகழ் வில்லை சேர்பவ - சிவசங்கரனே கிருபைசெய்வாயென்றடியார்கள் துதிசெய்தல் விளங்குகின்ற வில்லைப்பதியி லெழுந்தருளியிருக்கின்றவனே, சங்கர் ஆர் எழில் கூடல் தலைவ-சங்கத்தார்கள் நிறைந்துள்ளவழகையுடைய மதுரையில் பாண்டியனாகவந்தவனே, பழவினையால் கரா பற்று குஞ்சரம்போல அவசங்கொண்டு அலைந்தேன் நின்பதவசம-பூர்வவினையினால் முதலைவாயில் பிடிபட்டயானையைப்போலப் பரவசங்கொண்டு பிறவிக்கடலிலலைவுற்றேனினது திருவடிவசத்தில், கரானைதந்தோய்நின் றனிககதி அருள்வாய்-துதிக்கையையுடைய யானைமுகக்கடவுளைப்பெற்ற சிவபெருமானே நினதொப்பற்றகதியைக் கிருபை செய்யவேண்டும், ஏ-அசை. (௬௧)

கதிரவன்றேர்ப்பரி தாவப்பொழிலிற் கனிகளதிர்ந்
துதிரவன்மந்தி சறித்தெறிந்தாடு மொப்பில்வில்லைக்
செதிரவன்மீக வுருவாயமர்ந்த விறையவற்கூ
னதிரவன்னக்கொடு நஞ்சாமறிந்திடு நன்மொழியே.

(இ-ள்.) கதிரவன் தேர் பரி தாவ பொழிலில்-சூரியனிரதத்திற்கட்டிய குதிரைகள்பாய சோலைகளிலிராநின்ற, கனிகள் அதிர்ந்து உதிர வல் மந்தி கறித்து எறிந்து ஆடிடும் ஒப்பில் வில்லைக்கு - பழங்களதிர்ச்சிகொண்டு சிந்தவவைகளை வலிமையுள்ள குரங்குகள்கடித்து வீசிவிளையாடுகின்ற நிகரில்லாத வில்லைப்பதியில், எதிர் அவன்மீக வருவாய் அமர்ந்த இறையவற்கு ஊனது இரவன்ன கொடு நஞ்சம் அறிந்திடு நன்மொழியே-தோன்றுகின்றவந்தப் புற்றுருவமாக வெழுந்தருளிய சிவபெருமானுக் குணவானதிருளை யொத்த கொடியவிடமாம் தெரிந்துக்கொள் நல்லவசனத்தையுடையமாதே. (௬௨)

நற்கோலககாவதைக் கிள்ளைவிடாதளி நாண்மலரின்
முற்கோலககாவம ருமமவைபோல்வில்லை முன்னவனே
பொற்கோலக்காவுறை யென்னரசேதுட்ட புத்திவிட்டு
நிற்கோலக்காவென் றடுத்தேன்விடாதரு ணிட்களனே.

(இ-ள்) நல் கோலம கா வதை கிள்ளை விடாது அளி நாள் மலரின் முன் கோலம கா அமரும-நல்லவழகிய சோலையை க கிளிப்பிள்ளைகள்விடமாட்டாது வண்டுகளன்றலரும்புட் பங்களின்முன்னே தழுவுதல்செய்துவலியோடுபொருந்தும், அவைபோல் வில்லை முன்னவனே - அவைகளைப்போல் வில்லைப் பதியிலெழுந்தருளிய முதன்மையானவனே, பொன் கோலக்காவுறை என்னரசே துட்ட புத்திவிட்டு-இலக்குமிகரமுள்ள திருக்கோலககாவென்னுந் தலத்திலெ ழுந்தருளிய வெனதரசே யற்பபுத்தியைவிட்டுவிட்டு, நிற்கு ஓலம கா வென்று அடுத்தேன் விடாதருள் நிட்களனே- தே வரீருக்கபையம் காப்பாற்றுவாயென்று சேர்ந்தேன் நிட் களவடிவானவனே கைவிடாது கிருபைசெய்வாயாக, (கூ௯)

களங்கரியார்பொழில் சூழ்வில்லைவாழ்கின்ற கர்த்தரவை
குளங்கரியாக வரிபுலிகாணக் குனித்தவர்பால் [க்
விளங்கரியாரணற் கொண்டோரொற்கோதினர் மேவலர
களங்கரியாதவர் சொள்கைகண்டேயுரை காரிகையே.

(இ-ள்.) களங்கரியார் பொழில் சூழ் வில்லை வாழ்கின்ற கர்த்தர்-கண்டங்கறுத்தவர் சோலைகள்சூழ்ந்த வில்லைப்பதி யில் வாழுகின்றகடவுள், அவைக்குள் அம கரியாக அரி புலி காண குனித்தவர் பால்-சபைக்குளழகிய சாக்ஷியாக பாம பாகிய பதஞ்சலியும் வியாக்கிரபாதருந்தரிசிக்க கிருத்தஞ் செய்பவர் பக்கத்தில், விளங்கு அரி ஆரணன் கொண்டோர்-விளங்குகின்ற திருமாலையும் பிரமனையுங்கொண்டவர், எற்கு ஓதினர் மேவலர் அகளங்கர் காரிகையே இயாதவர்கொள் கை கண்டே உரை - எனக்கு வருகிறேனென்று சொல்லிப் போனவர்வரவில்லை களங்கரகிதர் பெண்ணே யவர்தன்மை யென்ன வதையறிந்து சொல்லுவாயாக. (கூ௪)

ஏகாதிபத்தியம் பூண்டிக்கவந்த வெலிதனக்கும்
ஏகாதிபத்தியம் பூண்டலகாள விளிதளித்தோ

ஏகாதிபத்தியம் பூண்டுறவோர்தமக் கீவளித்தே
ஏகாதிபத்தியம் பூண்டுன்னும்வில்லை யிலங்கரனே.

(இ-ள்.) ஏகா தீபத்து இயம்பு ஊண் துய்க்கவந்த எலித னக்கும் - ஏசனே தீபத்தினிடத்தில் சொல்லப்பட்ட வுண வாகிய நெய்யைக்குடிக்கவந்த வெலிக்கும், ஏகாதிபத்தி யம் பூண்டு உலகாள இனிது அளித்தோயே-ஏகச்சக்கராதி பத்தியந்தரித்துலகத்தையாளும்படிக்கு நன்மையைக்கொடு த்தவனே, அதிபத்தி அம் பூண் துறவோர்தமக்கு ஈவு அளித் து கா - மிகுந்தபத்தியுஞ் சிறப்பாகத் திருவேடந்தரித்தது ற வோர்தமக் குதவுதலையுங்கொடுத் தென்னை யிரக்ஷி, இபத்து இயம் பூண் துன்னும வில்லை ஏகாது இலங்கு அரனே- யானைமேன்முழங்கும் பேரிகை தனக்காபரணமாக நெரு ங்கப்பெற்ற வில்லைப்பதியில் நீங்கிப்போகாமல் விளங்கா நின்ற சிவபெருமானே. (கரு)

அங்காரப்பாறரு மாய்சீப்பினும்பிள்ளை யாயைவிடா
திங்காரமாம்பலைத் திங்கள்விட்டாலுமல் வேய்மலர்தான்
சிங்காரமாயடுக் கும்மலைபோல்வில்லை சேர்பரனே
உங்காரஞ்செய்துவிட் டாலுமவிடேனுன்னை யுத்தமனே.

(இ-ள்.) அங்கு ஆர பால் தரும் ஆய் சீப்பினும் பிள்ளை ஆயைவிடாது-அவ்விடத்துப்போதுமான முலைப்பாலைக்கொ டுக்குந்தாயானவள் ணிக்கிவிட்டாலுஞ் சேயானது தாயை விடமாட்டாது, இங்கு ஆர் அம் ஆமபலை திங்கள்விட்டாலும் அ ஏய் மலர்தான் சிங்காரமாயடுக்கும் - இவ்விடத்திற் பொ ருந்தியவழகையுடைய வல்லியைச் சந்திரன்விட்டுவிட்டாலு மந்தப் பொருந்தியமலரானது அலங்காரமாக வதைச்சேரு ம், அவைபோல் வில்லை சேர் பரனே - அவைகளைப்போல வில்லைப்பதியிலெழுந்தருளிய கடவுளே, உங்காரஞ்செய்து விட்டாலும் உன்னை விடேன் உத்தமனே-உம்மென்றுரப்பி விட்டாலும் தேவரீரை விடமாட்டேன் உத்தமசொரூபனே.

உத்தமவத்தி யுரியாயிங்கென்றுன் பொழித்துநல்ல
சித்தமவத்தையி னுன்றனைச்சிந்திக்கச் செய்யெழிலார்
மத்தமவத்தி மதிநதிவன்னியும் வாய்சடையாய்
சுத்தமவத்திய மாவுதைத்தோய்வில்லை தோய்பவனே.

(இ-ள்.) உத்தம அத்தியுரியாய் இங்கு என் துன்பு ஒழித்து நல்லசித்தம் அவத்தையில் உன்றனைச் சிந்திக்க செய்-உத்தமனே யானைத்தோலையுடையவனே யிவ்விடத்தி லடியேனது துன்பத்தைநீக்கி நல்லசிந்தைவந்து சரமதிசையி லுன்னைத் தியானிக்கச்செய்வாய், எழிலார் மத்தம் அ அத்தி மதி நதி வன்னியும் வாய் சடையாய்-அழகுபொருந்திய வூமத்தம்பூவு மந்தவெலும்புஞ் சந்திரனுங் கங்கையும் வன்னிப்பத்திரமும் பொருந்திய சடாபாரத்தையுடையவனே, சுத்த மவத்தியமா உதைத்தோய் வில்வை தோய்பவனே-சுத்தனே இயமனைமரணமாகும்படி யுதைத்தவனே வில்வைப்பதியிலெழுந்தருளி யிருக்கின்றவனே. (கூஎ)

தோயந்தருமுத்த மாநதிசூழ்முது தொல்குன்றன்று
ணேயந்தருமகுணத்தர்க்குசசெய்பவ னீணிலத்தீர்
ஆயந்தருமல ராலருச்சிக்க வடருவிர்நுங்
காயந்தருமன் கொடுபோகுமுன்வில்வைக் காத்தனையே.

(இ-ள்.) தோயந்தரும் முத்தமாநதி சூழ் முதுதொல்குன்றன் - வெள்ளத்தையுடைய பெருமைபொருந்திய திருமணிமுத்தாநதி சூழுகின்ற பழமலையையுடையவன், தான் நேயம் தருமகுணத்தர்க்கு செய்பவன் நீள் நிலத்தீர்-தனதுதிருவடி நேயத்தைத் தருமகுணமுடையவர்களுக்குச செய்பவன் நீண்ட பூமியிலுள்ளவர்களே, ஆய் அம தரு மலரால் அருச்சிக்க - ஆய்ந்தெடுத்தவழகிய மரத்தினது புஷ்பங்களாற் பூசைசெய்ய, நுங்காயம தருமன் கொடுபோகுமுன் வில்வைக்கர்த்தனை அடருவீர் - உங்கள் தேகத்தை யியமனானவன் கொண்டுபோகுமுன்னமே வில்வைப்பதியிலெழுந்தருளிய சிவபெருமானைச் சாருங்கள், எ-அசை. (கூஅ)

வில்லிடுமாமணிச் சூட்டுறுஞ்சேடனர்ச் சித்தவில்வை
சொல்லிடும்பைத்தொலைத் தன்பனையாண்டிடத் தோன்றுமபர
வல்லிடும்பற்கருள் கந்தனைப்பெற்றிடு மங்கைபங்கா
தொல்லிடுக்கார்கட நீங்குஞ்சமயமுன் றேன்றுவையே.

(இ-ள்.) வில்லிடும் மா மணி சூட்டுறும் சேடன் அர்ச்சித்த வில்வை - பிரகாசிக்கின்ற பெருமைபொருந்திய ரத்னத்தைச் சிரசிலேயுடைய ஆதிசேடன்பூசைசெய்த வில்வைப்பதியில், சொல் இடும்பை தொலைத்து அன்பனை ஆண்டிட

தோன்றும் பர - சொல்லப்பட்ட துன்பத்தைநீக்கியடியார் களையிரக்ஷிக்கவெழுந்தருளிய கடவுளே, வல் இடுமபற்கு அருள் கந்தனை பெற்றிடு மங்கை பங்கா - வல்லமைபொருந்திய விடும்பனுக்குக் கிருபைசெய்த முருகக்கடவுளை யீன்ற வுமாதேவியாரைப் பாகத்திலுடையவனே, தொல்லிடுக்கு ஆர் கடம் நீங்கும் சமையம் முன் தோன்றுவை-பூர்வவினை பொருந்திய தேகமானதுநீங்கிப்போகுந்தருணத்தில்அடியேனுக்கெதிரில்வந்து காட்சிதருவாய், ஏ-அசை. (கூகூ)

வையகந்தந்த மலைமாதிடத்த வசுந்தனையாம்
வையகந்தந்தரு காவில்வைவாணநின் வார்புகழ
வையகந்தந்தமைத் தேயரங்கேற்றினன் வாழ்விலெனை
வையகந்தந்தம தென்சீரழிவினை மாற்றியின்னே.

(இ-ள்.) வையகம் தந்த மலைமாது இடத்த - உலகத்தை யீன்றருளிய உமாதேவியை யிடப்பாகத்தில் வைத்தவனே, வசுந்தனை ஆம் வைய - பூமியாகிய ரதத்தையுடையவனே, கந்தம் தரு கா வில்வை வாண-பரிமளம்வீசாநின்ற பூஞ்சோலைசூழ்ந்த வில்வைப்பதியில் வாழ்பவனே, நின் வார புகழ் தந்து அமைத்து ஏ அவையகம் அரங்கேற்றினன் - நினது பெரும்புகழை (அந்தாதியென்னும்) நூலாகச்செய்து (அதனை நினது திருமுன்கூடிய) சபையில் அரங்கேற்றினன் (ஆதலால்) அகம் தந்தமது என்சீரழிவினை மாற்றி - யான் எனது என்னும்சீர்க்கேட்டை நீக்கி, எனை இன்னே வாழ்வில் வை-அடியேனை இப்போதே நித்தியவாழ்வில் வைத்தருளவேண்டும், எ-று. (ர)

## வாழி.

வாழியருள்செய்கா மீசர்குயிலம்மை வண்குமரன்
வாழிசுரர்மறை வில்வையந்தாதியு மாநதியும்
வாழிதென் வில்வ வனத்தன்பராயாவரும்வாழியென்றும்
வாழிநற் கல்வி மடத்துமெஞ்ஞான மகாமுநியே.

முற்றிற்று.

உ

சிவமயம்.

# வில்வவனக் கோகிலாம்பிகை மாலை.



## காப்பு.

### நேரிசை வெண்பா.

பொற்பார் பொழில்வில்லை போற்றுகுயி லம்மையின்மேல்
அற்பார பாமாலை யறைவதற்கு—விற்பனமா
குமரமுனி யங்கைகொண்ட குண்டிகையை யன்றுகவிழ்
தும்பிவத்திரன்றாள் துணை.

## நூல்.

### எழுசீர்க் கழிநெடில் ஆசிரியவிருத்தம்.

பொற்பமர்ந்திலகு மளகமாமுகிலும
  பொலிவுறு நுதலெனுந் தனுவும
விற்பனவடியா பவமொழிவிழியாம
  வேலுநன் னாசியாங் குமிழும்
பற்களாமுத்தும் பாதமாமலரும
  படிறனேன் காணுநா ளுளதோ
அற்புதந் திருக்காமீசர்பாகத்தா
  ரணிவில்வைக்கோகிலாம பிகையே. (௧)

பாண்டியன்வேள்வி தன்னின்மூவாண்டு
  பகரரும்புதல்வியா வந்து
மாண்டருமதுரை யாண்டிடுமரசே
  வஞ்சனேற்கருணா ளுளதோ
வேண்டுபொன்மனை நிற்றுண்டவஞ்செய்
  விமலர்காமீசர்பா கத்தார்
ஆண்டகையரச ரீண்டியேவாழு
  மணிவில்வைக்கோகிலாம் பிகையே. (௨)

சலத்தினிலுதிக்குங் குமிழியைநிகரிச்
சடத்தினைநிலையென வெணியெத்
தலத்தினுந்திரிந்து பொருளினற்பவத்தைச
சந்ததந்தேடிச்சா கரஞ்சேர்
கலத்தின்பாய்மரத்தி லகப்படுங்கொடிபோற்
கலங்குமெற்கருளுநா ளுளதோ
அலர்த்தடமமர்ந்த கற்பககொம்பே
யணிவில்லைக்கோகிலாம் பிகையே. (௫)

இருதலைக்கொள்ளி யெறும்புபோல்வருந்து
மேழையேன் றன்பொழுத் துனது
விரிதருங்கமல பதங்கினைந்திருக்க
விமலியேயருளுநா ளுளதோ
கரியமால்செய்பூ சனைக்குகந்தாழி
களித்துடனளித்தகா மீசர்
அரியநற்பாக மமருமாதுமையே
யணிவில்லைக்கோகிலாம் பிகையே. (௬)

சனனமாம்வாரி யிடையிற்சன்மமதாந்
தாவலைமோதிட நெஞ்சம
அனுதினமெலிவுற் றிருக்குமென் றனையுன்
னருளெனும்புணைதனைத் தந்து
வனசநற்பதமாந் தீரத்திற்சேர
வைத்திடுங்காலமு முளதோ
அனககாமீசர் பாகமதாரு
மணிவில்லைக்கோகிலாம் பிகையே. (௭)

சிவபிரான்முன்னந் தனைச்சிறுவனுக்குந்
திருமுலைப்பாலூறச் செய்து
நவமுறப்பாடச் செய்தனராதுபோ
லுயினேற்கருள்சிறி தளித்துப்
புவனமெச்சிடப்பா டிடும்வகைசெய்வாய்
போதன்மால்போற்றுகா மீசர்
அவமிலாவிடப்பா கத்தமர்மயிலே
யணிவில்லைக்கோகிலாம் பிகையே. (௮)

இராபடியெறகொண் டிருபதோடீரா
  றியலாமவளர்த்ததா யேயென்
பொருமிடியசற்றிப் பெருகிய சுகத்திற்
  பொருந்திடவருளுநா ளுளதோ
வருமுயலகன்மேற் றிருவடியூன்றி
  மாநடம்புரிந்தகா மீசர்
அருமைசேரிடத்தின் மருவிவாழ்பவளே
  யணிவில்லைக்கோகிலாம் பிகையே. (௭)

குயின்மொழிமடவார் மயலினிற்சிக்கிக்
  குலையுமென் மனநின தரிய
வெயின்மிகுவனசம் பயிலடியுன்னி
  வினையொழிந்திருந்திட வருளாய்
மயிலிவாகனனைச் செயிரறவளித்த
  வள்ளல்காமீசர்பா கத்தார்
அயினிகர்விழியாய் கைலையையொக்கு
  மணிவில்லைக்கோகிலாம பிகையே. (௮)

மூடனைக்கும்ப முனியெனவுரைத்து
  முதுக்குறைவின்றியே திரிவேன்
தேடருஞ்சடையின் முடியநாதன்
  றேவியேயென்றுதா னுன்னைப்
பாடிநல்லருளைப் பெறுகிலேனிந்தப்
  பாவியேனுய்வதெவ் வகையோ
ஆடரவணிகா மீசர்பாகமதா
  ரணிவில்லைககோகிலாம பிகையே. (௯)

சரவணபவசண் முககுகவயிலைத்
  தரித்திடுகார்த்திகை குமர
பரவடியர்களுக் கருள்செயுமுருக
  வெனவுனற்சுதன் றனைப் பரிவாய்க்
கரமலர்குவித்துப் பாடிடவருளாய்
  கதிர்மதிநதியிள மறுகோ
டரவையும்புனைகா மீசர்பாகத்தா
  ரணியில்லைக்கோகிலாம் பிகையே. (௧௦)

துதிபுரிநாவுங் கூப்பிடுகரமுந்
தூய்யநன்மலர்ந்த முகத்திற்
பதியும்வெண்ணீறு மடைந்துநின்கோயிற்
பரிவுடன்வலமபுரி யடியர்
பதியகற்கமல வடிப்பொடிமெய்யிற்
படவருள்புரிகுவை தாயே
அதிகராகியகா மீசர்பாகத்தா
ரணிவில்லைக்கோகிலாம பிகையே. (௧௧)

அடியவர்பணிசெய் திக்கடம்வருந்தி
யயரவும்வஞ்சர்நட் பிகந்து
நடுநிலைமையினி னிற்கவும்பொய்யை
நவின்றிடாதிருக்கவு மருளாய்
கொடியசூர்களைந்த வடியயில்கரங்கொள்
குகன்றனைத்தந்தகா மீசர்
அடைவுறுமிடப்பா கத்தமர்மயிலே
யணிவில்லைக்கோகிலாம் பிகையே. (௧௨)

கரும்பகடேறிப் பெருங்கதைபாசங்
கரங்களிற்கொண்டெம னென்னேர்
வருமுனம்வடிவேற் கந்தனுமானில்
வள்ளலாம்பரமனு நீயும்
மருவிவந்தஞ்ச லென்னுநாளுளதோ
மான்மழு தரித்தகா மீசர்
அருகினிலமருங் கருணைவாரிதியே
யணிவில்லைக்கோகிலாம் பிகையே (௧௩)

நாள்களுங்கோளு நலியும்வெங்கூற்று
நண்ணுறுவினையுமென் செயுநின்
தாளிணைதுதிக்கு மன்பரைக்காக்குந்
தண்விழியருளெனக் கிருக்கில்
காளியோடொருகா லன்றுமாநடத்தைக்
களிப்புறப் புரிந்தகா மீசர்
ஆளிடப்பாக மமருமாவமுதே
யணிவில்லைக்கோகிலாம் பிகையே. (௧௪)

கற்பனைகடந்த வொருபொருணிலையைக்
 கண்டுபேரின்பசா கரத்தில்
பொறபுறத்திளைக்கும் புண்ணியர்க்குதவப்
 பொருந்திநீதிருவருள் புரிவாய்
விறபனமுனிவா நடுங்கிடவந்த
 வெங்களிறுரித்தகா மீசா
அறபுறும் பாகத தமர்ந்தகாருணியே
 யணிவில்லைககோகிலாம் பிகையே. (௧௫)

பத்திசெய்தறியேன் பண்புறுமன்பர்
 பணியையும்புரிந்திட வறியேன்
உத்தமநூலா ராய்ச்சிசெய்தறியே
 னுன்மத்தனையினே னருளாய்
சததவாரிதிபொன் மாலைநீராடத்
 தககணம்வரச்செய்கா மீசா
அததபாகததி லமரொளிவிளககே
 யணிவில்லைககோகிலாம் பிகையே. (௧௬)

ஓதியுமுணர்ந்தும் பிறர்தமக்குரைத்து
 மடங்கியேயொழுகிடாச் சுத்த
பேதையிற்பேதை யாரிலதென்ற
 பெருந்திருவள்ளுவர் மொழிக்குச்
சாதமாரிலக்கா யிருந்தநான் றிருந்தத்
 தண்ணருள்புரிவையோ தாயே
ஆதியாகியகா மீசர்பாகத்தா
 ரணியில்லைககோகிலாம் பிகையே. (௧௭)

பண்டுசெய்வினையான் மானிடப்பிறப்பிற்
 படிறனேனுதித்துநல் லன்பார்
தொண்டர்தங்குழுவிற் கூடிநின்னடியைத்
 துதித்திட வறிகிலே னருளாய்
மண்டெழின்மதுரைச் சங்ககீரற்
 கிலக்கணம்வழுவற வுரைத்த
அண்டர்கடுதிகா மீசர்பாகத்தா
 ரணியில்லைக்கோகிலாம் பிகையே. (௧௮)

தீமையேபுரியுந் துட்டர்தங்குழுவிற்
  சேர்ந்திடாதுன்னையெஞ் ஞான்றும்
வாய்மையோடொழுக்க முடன்றுதிபுரிந்து
  வல்வினையொழித்துநற் சமாதி
தூய்மைசோகிலைகா னடைகுவதென்றோ
  சுருணிசுந்தரிதிரி கோணி
ஆமதிபுனைகா மீசர்பாகத்தா
  ரணிவில்வைக்கோகிலாம் பிகையே. (௧௯)

செப்பரும்பஞ்சு பட்டிடும்பாடுந்
  தீயனேன்பட்டிடும் பாட்டுக்
கொப்பலதாயே யினியெனுன்முடியா
  துன்னடிக்கடைக்கல மருளாய்
முப்புவனங்கள் போற்றிடவிமய
  முளைத்ததீஞ்சுவைமிகு கரும்பே
அப்பணிசடைக்கா மீசர்பாகத்தா
  ரணிவில்வைக்கோகிலாம் பிகையே. (௨௦)

முன்னம்யான்செய்த வெவ்வியவினையான்
  முனிந்தெமனுனடுங் கிடவே
பன்னரும்பாசத் துடனெதிர்வருமுன்
  பாவியேற்கபயமீந் தருளாய்
இன்னிசைமிகுந்த விறலிவென்றிடவோ
  ரிரும்பெரியோனென வந்த
அன்னங்காணுக்கா மீசர்பாகத்தா
  ரணிவில்வைக்கோகிலாம் பிகையே. (௨௧)

செபதபமுதலி யவைகளாடத்தச்
  சிந்தையிலுன்னுமுன் னெதிர்த்தே
இடமெனக்கோபஞ் சோபமோசமுமவர்
  திடுக்கணைப்புரிகின்ற வந்தோ
சுபமிகுவிளங்கு நித்யகல்யாண
  சுந்தரிதொலைத்தரு ளன்பர்க்
பயமீந்திடுகா மீசர்பாகத்தா
  ரணிவில்வைக்கோகிலாம் பிகையே. (௨௨)

இன்னியவரக்கர் குலமறவென்ற
  செந்திருமார்பனோ டயனுமு
நன்னூனின்னருளாற் றங்களின்றொழிலை
  நடத்துவதென்னிலுன் புகழை
என்னுறவெடுத்துச் சொல்வதற்கெளிதோ
  வேழையேற்கன்னையே நல்ல
அன்னமல்காமீச ரிடத்தினிலமரு
  மணியில்லைக்கோகிலாம் பிகையே. (௨௩)

ஏர்திகழ்கினது வடிவதைக்கண்டென்
  னிருவிழிகளுமன முமமே
சீர்திகழ்ந்திடுமா னந்தவெள்ளத்திற்
  றிளைத்திலசெப்புதற கரிதாம
நார்திகழ்ஞானம விளங்கிலதாயே
  நாயினேனுய்வதெவ் வகையோ
ஆர்திகழ்சடைக்கா மீசர்பாகத்தா
  ரணியில்லைக்கோகிலாம் பிகையே. (௨௪)

சந்ததம்வாளாப் பலிதனைக்கொள்ளுஞ்
  சங்கடமிகுதெய்வங் களையென்
சிந்தையிலென்றுஞ் சிந்தியாதுன்னைச
  சேந்தனைச்சிவபெரு மானை
அந்திநற்பகல்கா லையிலும்வேலையதா
  வன்புடன் றுதிசெய வருளாய்
அந்தரர்துதிகா மீசர்பாகத்தா
  ரணியில்லைக்கோகிலாம பிகையே. (௨௫)

கனல்புனனிலம்விண் கான்மதியிரவி
  காரிருள்பகல்பல வுயிர்கண்
மனுமிவைகளிற்பூ மணநறும்பாலிலு
  வமுத்தருஞ்சுவையெனக் கலந்த
வனமிகுமயிலே யடியனேன்புன்மை
  மாற்றிநல்லருள்செய லென்றோ
அனகர்கடுதிகா மீசர்பாகத்தா
  ரணியில்லைக்கோகிலாம் பிகையே. (௨௬)

செழியர்கோன்மகளா யுதித்துலகாண்ட
செல்வியேநின்கடை விழிகள்
பழியிலாவடிய ரென்பவர்ககரிய
பாக்கியங்கல்வியுங் கதியும்
ஒழிவறககொடுககு மென்னிலுன்பெருமை
யுரைக்கவவ்வெளியனுற் றகுமோ
அழிவிலாத்திருககா மீசாபாகததா
ரணிவில்வைககோகிலாம பிகையே. (உஎ)

கலைதெரிமகளு மலைவருமகளுங்
கலந்துநின்பொன்னடி குறித்து
மலைமகளென்று வழுததிநாததழுமப
வந்தனைபுரிகுவ ரென்றால
புலையனேனுன்னைப புகழ்சசியாசசொலுமிப
புன்கவிககுகந்தரு ளுவையோ
அலைநதியணிகா மீசாபாகத்தா
ரணிவில்வைக்கோகிலாம பிகையே. (உஅ)

செய்திடுங்குறைக ளொழிந்திடநினது
திருவடிதுதிசெயதே னினியான்
வையகந்தன்னி லுதித்திடினினது
குறையன்றியார்குறை வழுத்தாய்
தையல்பொன்னனையாட் கருடரச்சித்த
சாமியாய்வந்தகா மீசர்
ஐயமாிடப்பா கத்தொளிரணங்கே
யணிவில்வைககோகிலாம் பிகையே. (௯)

பருப்பதமுலைத்த தீஞ்சுவைக்கரும்பே
பவளமால்வரைபடர் கொடியே
விருப்பொடுதுதிக்கு மிடியனேற்கிரங்கி
விழியருள்சுரந்தருள் புரிவாய்
செருப்புரிவிசய னலம்பெறவெதிர்த்துச்
செப்பரும்போர்செய்கா மீசர்
அருத்தமாிடத்தி லமரொளிவிளக்கே
யணிவில்வைககோகிலாம் பிகையே. (௩௦)

முற்றிற்று.



உ

முருகன்றுணை.

வில்வவனத்தில் திருக்கோலங்கொண்
டெழுந்தருளியிருக்கும்

# முத்துக்குமாரக்கடவுள்பேரில்

பஞ்சரத்தினம்.



## காப்பு.

நேரிசைவெண்பா.

மஞ்சுதிகழும்பொழில்சூழ் வண்மைவில்லைவேண்மீது
பஞ்சரத்தினத்தைப் பகாவதற்கு—விஞ்சு
நலம்புரியுஞ் சங்கரனார் நல்குஞ்சுதனும
வலம்புரிவி நாயகனை வாழ்த்து.

நூல் - வண்ணச் சந்தவிருத்தம்.

மலனாந்தரு துன்றியிலங்கிய - ககனந்திக ழிந்திரனென்று
மதிமங்குத லண்டிடவெண்டிசை - களின்மேவா, [நன்

மருள்கொண்டிடு வஞ்சகநெஞ்சர்கண்
கவிசெந்தமிழ் சந்ததமுஞ்சொலி
வளமின்றுதி ரிந்துதிரிந்தன
னவமாயே,

மெலிகின்றனன் மஞ்சுதினந்திகழ் - மலைநின்றுபி றந்திடு
[மம்பிகை
விழைவொன்றும ருஞ்சுதனென்றுந-லுளமோடே,

வெகுவிந்தையி தென்றெவருஞ்சொல-நகுசந்தமி குந்துபுக
ழிணைநின்றுமொ ழிந்திடவந்தருள்-புரிவாயே, [ன்றிட

அலையொன்றுக ருங்கடன்மண்டிய
வளைகின்றவி லங்கைபொருந்திய
வசுரன்சிர மண்டனில்சிந்திட
சினமோடே,

அறையுங்கலை யுந்துமுகுந்தனின்-மருமந்திக ழுந்திருவெண்
மலர்மங்கையு வந்தருளுந்திரு-மருகோனே,  [றிடு

மலைதங்கிய வன்குறமங்கையை
நலமிஞ்சுபு னந்தனில்வந்ததி
மயல்கொண்டும ணந்துமகிழ்ந்தருள்
முருகோனே,

வனசங்களு மஞ்சளுமிஞ்சியும்-விளைகின்றநி லங்களினிறைந்
[துள
வளமொன்றிய வில்வையிலங்கிய-குகவேளே.  (க)

அறிவுமங்க லுற்று - முனம்வருந்தி மெத்த
வெருமையென்றி ழைத்த - வினையாலே,

அறையுமந்த ரத்தின் - பிறையைவென்ற நெற்றி
யழகமைந்து முற்று - மதின்மேலே,

நறியமஞ்ச ளிட்ட - வடிவுகண்டு சொற்ப
நலமின்மங்கை கத்து - செயலாலே,

நவிலுகின்ற பித்த - விருமல்கொண்டு சத்தி
நலியுமென்ற னுக்கு - னருளாறு,

மறவிகந்த சுத்த - வவிடதங்கொ டுத்து
மணியமாந்தி சைக்கு - மணி மேவா,

மலர்களென்று ரைக்கும் - பதயுகஞ்சி ரத்து
மனமுவந்து வைத்தெ - னெனையாளாய்,

இறையிருந்த பத்தன் - றுதியுணர்ந்து பச்சைச்
சிகியில்வந்து விட்ட - முருகோனே,

திருமணஞ்சி றக்கப் - புரியும்வில்லை யுற்றுத்
திகழுகின்ற வத்த - குகவேளே.  (உ)

சந்தந்தங் கைக்தருவார்நிழல் - குந்தந்தம் பந்தியினாடியர்
தந்தந்தந் தந்தனதானென-டமாட,

சங்கும்பம் பம்மென வூதிட-அங்கங்குஞ் சிந்துசள்பா
தங்கும்பொங் கிந்திரனேமுத-லனைவோரும்,  [டி

வந்தஞ்செம் பஞ்செனவேதிகழ்-கஞ்சந்தன் றும்மிருசீரடி
மந்த்ரங்கொண் டன்புறவேசொலி-துதிமேலா,

மண்டுந்திண் கந்திலையேமுறி-வம்புங்கொண்டண் டிய
வஞ்சம்மிஞ் சும்படையோடட-னமனுனன், [மேதியில்

தொந்தங்கொண் டங்கரமேவிய-நஞ்சும்பொன் றங்கயிரு
துந்துந்தும் மென்றெனையேயட-வருநாளே, [டெதிர்

சங்கந்தொங் குஞ்சிகிமீதினில்
பங்கங்கன் றந்திருமாதரின்
துன்றங்கம் மிஙகிதமேகொள
வருவாயே,

சந்தஞ்சந்தம் மகில்சூழ்தரு-விந்தந்தண் பண்பொடுசேமுற
கண்டஞ்சும் விண்டநன் மாதவன்-பணிவேலா,

காந்த்ரந்துஞ் சும்மணிமேடைகள்
எஙகெங்குந தங்கெழில்சூழ்விலைக்
கண்டங்குந் துங்கதயாபர
குகவேளே. (௫)

பலவினையைப் புரியபவப்-பிறவியெடுத் தருமையெனப்
பகருமனுக் களினில்வரத்-தவமேவா,

பரனடியைக் கருதறவிர்த்-தழகொழுகப் புழுகினைநற்
பழமொழியர்க் குருகிமனத்-தளர்வோடே,

அவமதியுற் றனனெனமித்-திரரிகழத் திரியுமெனக்
கதிகபலப் பலமணியிட்-டவைபூடே,

அவிரொளிபொற் பரிபுரமிட்-டடைவொடுமிக் கொலி
கடிமலரைத் துதிபுரியத்-தருவாயே, [செய்மணக்

கவனமுறத் திகுதிகெனச்-சிறகொடுநிர்த் தனமிடுசொற்
கலபமயிற் பரியதனிற்-களியாயே,

கருதுமடக் குமரிகளுக்-குவகைமிகக் கழலர்மனக்
கவலையொழித் திடவருசத்-தியவேலா,
தவர்வெருவச் சுரரயரத்-துயர்புரிமுப் புரநகரிற்
றழலெரியச் செயுமரனுக்-கருள்வோனே,
தமனியபொற் சிகரிகளிற்-புயல்கள்களித் துலவுவிலைத்
தனிநகரிற் றிகழுயில்கைக்-குகவேளே. (௬)

## முத்துக்குமாரக்கடவுள்பேரில் பஞ்சரத்தினம்.

ஞானமிருத்திடு முத்தர்கள்சித்தர்கள்-மோனமொனுச்சொரூ
[பத்தர்கள்விற்பன
நாவலரற்புத மிக்கதவத்தர்கண்-முதலோரும்,

ஞாலமளித்தருள் வித்தகியுத்தமி
யாலிலையிற்றுயி லச்சுதனுக்கிளை
நாரணிதற்பரி சாக்குணிநிர்க்குணி
யபிராமி,

வானுலகத்தமு தொத்தமொழிச்சிமுன்-மேனையளித்திடு
[புத்திரிமுக்கணன்
வாமமதிற்றிகழ் சத்திதனக்கொரு-சுதனாகி,

வாரியின்மத்திமு ளைத்தெழுகொக்கினை
வேலினைவிட்டுமு றித்திடுநித்திய
வானவர்சொற்றுதி பெற்றிடுசிற்பர
வெனவோதும்,

கானவர்பெற்றகு றத்தியுவப்புறு-நாயகனத்தியு னைதொரூ
[மெறகுநின
கான்மலரொத்தப தத்துணையைத்தர-வரவேணும்,

காதமணக்கும லர்க்கணைவைத்திடு
மேதமில்சித்தச னிற்றிகழுற்றிடு
காவலர்மெச்சுதி ருத்தணிகைப்பதி
யமர்வேலா,

சீனர்கள்பப்பர ரொட்டியர்குச்சரர்-மாளுவமக்கடு
[ருக்கர்கணமற்றுள
தேயமுமொக்கம கிட்சிகொளத்தரும்-வளமேவிச,

சீருறமுக்கிய நற்பொழில்பற்பல
வேருறவைத்தெழி லைச்செயமிக்கதி
சீதளமுற்றவில் வைப்பதிகச்சிய
குகவேளே.

முற்றிற்று.